உ

கடவுள் துணை.

—*—

தாயுமான சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு.



இஃது

சுப்பிரமணிய சுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

---

சென்னை-இட்டா

பார்த்தசாரதி நாயுடு

அவர்களாற்றமது.

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

—*—

1910.

சென்னை-ஆச்சாரப்பன்தெரு, நெ. 8ம்.

கடவுள் துணை.

# தாயுமான சுவாமிகளது

# சரித்திரச் சுருக்கம்.

---

புண்ணியபூமியாகிய இப்பரதகண்டத்திலேதென்னாடுகள் பலவற்றினுஞ் சிறந்து திவ்விய க்ஷேத்திரங்கள் நிறைந்துவருவதாகிய சோழமண்டலத்திலேவேதாரணியமென்னும் வடமொழிப் பெயருடைய திருமறைக்காடாகிய சிவஸ்தலத்திலே சற்றேறக்குறைய ௨௱ - வருஷங்களுக்குமுன் வேளாண்மை குலத்திலே திருலிங்கசங்கமபத்தியிலேசிறந்தவராய் கேடிலியப்பிள்ளைஎன்பவர் ஒருவர் இருந்தார் அவராலேஅந்தச் சிவஸ்தலவிசாரணை நடத்தப்பட்டுவந்தது அக்காலத்தில் திரிசிரபுரத்திலே செங்கோல் நடத்திய விஜயரகுநாத சொக்கலிங்கநாயகர் என்பவர் கேடிலியப்பிள்ளையினுடைய நற்குணங்களையும் கணக்குவல்லமைகளையும் கேள்விப்பட்டு அவரைவரவழைத்துபரிட்சித்து அவருக்குத்தமதரண்மனையில் பெரியசம்பிரதி யுத்தியோகம் கொடுத்தனர். அக்கேடிலியப்பிள்ளையானவர்சந்ததியில்லாதவராயிருந்தமையனாருக்

குத் தன்னுடைய ஓரேபுத்திரனாகிய சிவசிதம்பரப்பிள்ளை என்னும் குமாரனைக்கொடுத்துவிட்டிருந்ததினால் தமக்குச்சந்ததியுண்டாக அருள்செய்யும்படிக்கு அந்ததிரிசிரபுரத்தில் எழுந்தருளியிராநின்ற தாயுமானேசுரரைத் தெரிசித்துக்கொண்டு வந்தனர். அக்கடவுளின் திருவருளினாலே ஓராண்பிள்ளைபிறந்தது. அதுகண்டு தந்தை மகிழ்ந்து அக்கடவுளுக்கு காணிக்கைமுதலானது செலுத்தி குமாரனுக்குத்தாயுமானவரென்கிற அக்கடவுளது திருநாமத்தையே கொடுத்தனர். அந்தத்தாயுமானவர் தன் தகப்பன் மிகவும் மகிழும்வண்ணம் அவர்செய்யுமுயற்சியளவிற்கு அதிகமாகக் கீர்வாணந்தமிழ் முதலிய கல்விப்பயிர்ச்சியில்சிறந்தவரானார். உண்மை, அன்பு, பொறுமை, அடக்கம், இரக்கம் இவைமுதலிய நற்குணங்களெல்லாம் அவரோடு கூடவே வளர்ந்தன. ஓர் அஞ்ஞானியினது மனமானது நிலையில்லாத செல்வப்பொருளை எப்படிவிரும்புமோ அப்படியேஇவரது மனமானது தத்துவப்பொருளையே விரும்பிநின்றது. அப்படியிருக்கையில் திருமூலநாயனார் மரபிலே எழுந்தருளிய மௌனதேசிகர் தாயுமானவரைச்சந்தித்து அவரது அதிதீவிரபக்குவத்தைக்கண்டு வேதா

சமயங்களின் முடிவான தத்துவப்பொருளை உபதேசித்தனினார். அதுமுதலாக தாயுமானசுவாமியானவர் தமது ஞானாசாரியனிடத்தே மிகுந்த பக்தியுடையவராய் அவ்வுபதேசப்பொருளை சிந்தித்துத் தெளிந்து தினந்தோறும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே நிஷ்டை செய்துக்கொண்டு வந்தனர். சிலகாலஞ்சென்ற பின்பு கேடிலியப்பிள்ளை தேகவியோகமடைந்தனர். அதனாலே தாயுமானவர் தந்தையினது லௌகிகத் தொழிலைதாம்பார்க்க அதில் விருப்பமில்லாதவராயிருந்தும் அரசனது வேண்டுகோளால் ஏற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று. அரசன் அவரைஞானவானென்று முதலிலேயறிந்திருப்பினும் கேடிலியப்பிள்ளையிலும் இவர் யோக்கியரென்று நன்கு மதித்து மிகவுஞ் சிறப்புச்செய்து வைத்திருந்தனன். ஆயினும் கழைக்கூத்தனுடையகருத்து உடற்காப்பினும் அவனது செய்கை கூத்திலும் எப்படிவக்கைப்பட்டிருக்குமோ அப்படியே தாயுமானவரது கருத்து சிவத்திலும் அவரது செய்கை லௌகிகத்திலும் வைக்கப்பட்டிருந்தது. இப்படியே சிலநாட்கள்கழிந்தனமேல் விவேகியாகிய அரசன் அவரிடத்தேவிளங்கிய அபூர்வமான சிவசெய்கைகளைக்கண்டு உடனே அச்சமும் அன்பும் உடையவனாய் அவரை அழைப்பித்து

உயர்ந்ததோர் ஆசனத்தின்மேலே இருந்தருளச்செய்து சுவாமி. அடியேன் இதுவரையிலும் உமது மகிமையைக் கண்டறியமாட்டாதவனாய் உமக்கு ஊழியஞ்செய்யத்தக்கவனாகிய நான் உம்மை ஒன்றுக்கும் பற்றாக எனது ஊழியத்தினாலே வைத்திருந்தபெருங்குற்றத்தைக் கிருபாமூர்த்தியாகியதேவரீர் பொறுத்தருளி இன்றுமுதலாக அடியேனால் ஆகவேண்டியவற்றைச் செய்வித்துக்கொண்டு நிஷ்டைக்கு குறைவுபடாமலிருக்கலாம் என்று வேண்டிக்கொண்டனன். அதுகேட்டு திருவுளமகிழ்ந்து தாயுமானவர் அன்று முதலாக அளவற்ற ஞானயோகத்திலே அறிவைச்செலுத்தி சிவபெருமானையும் ஞானாசிரியனையும் அற்புதசின்மயமதுரமான தமிழ்ச்செம்பாடல்களைப்பாடிதுதிசெய்துவந்தனர். இப்படியிருக்கையில் அரசன்சிவபதமடைந்தனன். அவ்வரசன்மனைவி தாயுமானவரது திருமேனியின்பொலிவைப் பலரால் பலமுறைகேள்விப்பட்டு அவரையழைப்பித்து கண்ணிகூறநோக்கி கேள்விப்பட்டவளவினும் அதிகமாய்விளங்கக்கண்டு உளமருண்டு அவரைத் தன்னரசாட்சிக்குத் தலைவராகவும் தன்னால் விரும்பப்பட்ட தகாத செய்கைக்கு உடன்படுத்தவும், தான் கொண்

டகருத்தை அவருக்குக் குறிப்பித்தாள். அக்கருத்தையறிந்த தாயுமானவர் உடனே ஒருபாயவழியினலே அங்கிருந்து தம்மை விடுவித்துக்கொண்டு அவ்ன் அரசாட்சியினெல்லையைக்கடந்து இராமநாதபுரத்தைச் சேர்ந்தருளினார். இச்செய்தி சிவசிதம்பரப்பிள்ளையின் செவியை அடைந்தினாலே அவரும் தன்சிறியதாய் குமாரராகிய அருளையப் பிள்ளையும் தேடிக் கண்டுபிடித்து சந்ததிவிளங்கவேண்டுமென்னும் கருத்துக்கொண்டு திருக்கலியாணஞ் செய்யும்படி முயற்சிசெய்தார்கள். தாயுமானசுவாமிகளுக்கு அந்த காரியத்திலேசிறிதுந் திருவுளமில்லாதிருந்தும் தமையனார் வேண்டுதலின் மிகுதியினாலே உடன்பட்டனர் உடனேபத்தினியாள் ஓராண்பிள்ளையைப்பெற்று வைத்து சிவபதமடைந்தாள் அந்தப் பிள்ளைக்குக் கனகசபாபதிபிள்ளை என்று பெயரிட்டனர். அதுமுதலாக் தாயுமானசுவாமிகள் கௌபீனத்தோடு பெரிசுத்த சிவஸ்தலந்தோறும் சஞ்சரித்துக்கொண்டு இவ்வுலகத்திலுள்ள மனிதர்களெல்லாம் மெய்ஞ்ஞான வொளியைப்பெற்று அஞ்ஞான விருளினின்று நீங்கி உய்யும்பொருட்டு பலவகைப்பட்ட அற்புதமான பாடல்களைத் திருவாய்மலர்ந்தருளினர் அருளையரென்பவரும் அவரிடத்தே தத்துவ வுபதேசம் பெற்று அவரைவிட்டுநீங்காமல பணிவிடைசெய்துகொண்டு வந்தனர்.

தாயுமானசுவாமிகளது சரித்திரச்சுருக்கம்.

தாயுமான சுவாமிகள் அகண்ட பரிபூரணசச்சிதாநந்த சொரூபமாகிய சிவத்திலேகலந்தபின்பு அருளையச்சுவாமிகள் அசைவற்பாவினாலே குருவைத்துதித்துச் சிவயோகத்திலேயிருந்து தமக்குப் பின்பக்குவப்பட்டுவரும் அடியார்களுக்கு அநுக்கிரகஞ் செய்யும்விதம் மேற்படி கனகசபாபதி பிள்ளைக்கு அபிஷேகம்செய்து அருளினார்.

இக்குரு பரம்பரையில் தஞ்சைமா நகரத்துக்கு கீழ்பால் அங்கப்பன் பேட்டையிலுள்ள மடத்திலிருந்த அம்பலவாண சுவாமிகளுடைய அடியார்கூட்டத்திலே ஒருவராகியும் அந்த ஆதீனத்துக்கு உரியவராகியுமுள்ளே எடுத்துக்கட்டி அருணாசல சுவாமிகளிடத்திலிருந்த ஆதீன புஸ்தகத்தையும் மற்றுஞ் சில புஸ்தகத்தையும் மற்றுஞ்சில புஸ்தகங்களையும் அழைப்பித்து ஒப்பிட்டு இப்புத்தகத்திலுள்ள பாடல்கள் ஆதியில் அச்சிடப்பட்டனவாய்த் தெரியவருகின்றது.

தாயுமானசுவாமிகளது சரித்திரச்சுருக்கம்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தாயுமான சுவாமிகள் பாடல்:

## திருவருள்விலாசப் பரசிவவணக்கம்.

### ஆசிரிய விருத்தம்.

அங்கிங்கெனாதபடி யெங்கும்ப்ரகாசமா
  யானந்தபூர்த்தியாகி
யருளொடுநிறைந்ததெது தன்னருள்வெளிக்குளே
  யகிலாண்டகோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த்
  தழைத்ததெதுமனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
  தந்தெய்வமெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது
  வெங்கணும்பெருவழக்கா
யாதினும்வல்லவொரு சித்தாகியின்பமா
  யென்றைக்குமுள்ளதெதுமேற்
கங்குல்பகலறநின்ற வெல்லையுளதெதுவது
  கருத்திற்கிசைந்ததுவே

கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலிசெய்குவாம். (௧)

ஊரனந்தம்பெற்ற பேரனந்தஞ்சுற்ற
முறவனந்தம்வினையினு
லுடலனந்தஞ்செயும் வினையனந்தங்கருத்
தோவனந்தம்பெற்றபேர்
சீரனந்தஞ்சொர்க்க நரகமுமனந்தநற்
றெய்வமுமனந்தபேதந்
திகழ்கின்றசமயமு மனந்தமதனுன்ஞான
சிற்சத்தியாலுணர்ந்து
காரணந்தங்கோடி வருஷித்ததெனவன்பர்
கண்ணும்விண்ணுந்தேக்கவே
கருதரியவானந்த மழைபொழியுமுகிலைநங்
கடவுளைத்துரியவடிவைப்
பேரனந்தபேசி மறையனந்தஞ்சொலும்
பெரியமௌனத்தின்வைப்பைப்
பேசருமனந்தபத ஞானவானந்தமாம்
பெரியபொருளைப்பணிகுவாம். (௨).

அத்துவிதவத்துவைச் சொற்பிரகாசத்தனியை
யருமறைகண்முரசறையவே
யறிவினுக்கறிவாகி யானந்தமயமான
வாதியையநாதியேக

தத்துவசொரூபத்தை மதசம்மதப்பெருச்
சாலப்பகிதமான
சாலவதபுட்கல நிராலப்பவாலம்ப
சாந்தபதவ்யோமமில்லை
நித்தநின்மலசகித நிஷ்ப்ரபஞ்சப்பொருளை
நிர்விஷயசுத்தமான
நிர்விகாரத்தைத் தடத்தமாய்நின்றொளிர்
நிரஞ்சனநிராமயத்தைச்
சித்தமறியாதபடி சித்தத்தினின்றிலகு
திவ்யதேசோமயத்தைச்
சிற்பரவெளிக்குள்வளர் தற்பரமதானபர
தேவதையையஞ்சலிசெய்வாம். (௩)

—*—

## பரிபூரணானந்தம்.

வாசாகயிங்கரிய மன்றியொருசாதன
மனுவாயுகிற்கும்வண்ணம்
வாலாயமாகவும் பழகியறியேனறுறவு
மார்க்கத்தினிச்சைபோல
நேசானுசாரியாய் விவகரிப்பேனந்த
நினைவையுமறந்தபோது
நித்திரைகொள்வேன்றேகநீங்குமெனவெண்ணிலோ
நெஞ்சந்துடித்தயருவேன்.

பேசாத்வானந்த நிட்டைக்குமறிவிலாப்
பேதைக்கும்வெகுதூரமே
பேய்க்குணமறிந்திந்த நாய்க்குமொருவழிபெரிய
பேரின்பநிட்டையருள்வாய்
பாசாடவிக்குளே செல்லாதவர்க்கருள்
பழுத்தொழுகுதேவதருவே
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (க)

தெரிவாகவூர்வன நடப்பனபறப்பன
செயற்கொண்டிருப்பனமுதற்
றேகங்களத்தனையு மோகங்கொள்பௌதிகஞ்
செனித்தவாங்கிறக்கும்
விரிவாயபூதங்க ளொன்றோடொன்றாயழியு
மேற்கண்டசேடமதுவே
வெறுவெளிநிராலம்ப நிறைசூனியமுபசாந்தம்
வேதவேதாந்தஞானம்
பிரியாதபேரொளி பிறக்கின்றவருளருட்
பெற்றோர்கள் பெற்றபெருமை
பிறவாமையென்றைக்கு மிறவாமையாய்வந்து
பேசாமையாகுமெனவே
பரிவாயெனக்குநீ யறிவிக்கவந்ததே
பரிபாககாலமலவோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (உ)

யானெனதறத்துரிய நிறைவாகிநிற்பதே
யின்பமெனுமன்புமுண்டு
கண்டனவெலாமல்ல வென்றுகண்டனைசெய்து
கருவிகரணங்களோயக்
கண்மூடியொருகண மிருக்கவென்றாற்பாழ்த்த
கன்மங்கள் போராடுதே
பண்டையுளகன்மமே கர்த்தாவெனும்பெயர்ப்
பக்ஷமானிச்சிப்பனோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௨)

சந்ததமுமெனதுசெய லினதுசெயலாயெனுந்
தன்மையினையன்றியில்லாத்
தன்மையால்வேறலேன் வேதாந்தசித்தாந்த
சமரசசுபாவமிதுவே
இந்தநிலைதெளியநா னெக்குருகிவாடிய
இயற்கைதிருவுளமறியுமே
இந்நிலையிலேசற் றிருக்கவென்றுண்மடமை
யிதசத்துருவாகவந்து
சிந்தைகுடிகொள்ளுதே மலமாயைகன்மந்
திரூபுமோ தொடுவழக்காய்ச்
சென்மம்வருமோவெனவும் யோசிக்குதேமனது
சிரத்தையெனும்வாளுமுதவிப்

பந்தமறமெய்ஞ்ஞான தீரமுந்தந்தெனைப்
பாதுகாத்தருள் செய்குவாய்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௭)

பூதலயமாகின்ற மாயைமுதலென்பர்சிலர்
பொறிபுலனடங்குமிடமே
பொருளென்பர்சிலர்கரணமுடிவென்பர்சிலர்குணம்
போனவிடமென்பர் சிலபேர்
நாதவடிவென்பர்சிலர் விந்துமயமென்பர்சிலர்
நட்டநடுவேயிருந்த
காமென்பர்சிலருருவ மாமென்பர்சிலர்கருதி
காடிலருவென்பர் சிலபேர்
பேதமறவுயிர்கெட்ட நிலையமென்றிடுவர்சிலர்
பேசிலருளென்பர்சிலபேர்
பின்னுமுன்னுங்கெட்ட சூனியமதென்பர்சிலர்
பிறவுமேமொழிவரிவையால்
பாதரசமாய்மனது சஞ்சலப்படுமலாற்
பரமசுகநிஷ்டைபெறுமோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (அ)

அந்தகாரத்தையோ ரகமாக்கியின்போலென்
னறிவைச்சுருக்கினவரார்

ரவ்வறிவுதானுமே பற்றினதற்று
யழுந்தவுந்தலைமீதிலே
சொந்தமாயெழுதப் படித்ததார்மெய்ஞ்ஞான
சுகநிஷ்டைசேராமலே
சோற்றுத்துருத்தியைச் சதமெனவுமுண்டுண்டு
தூங்கவைத்தவரார்கொலோ
தந்தைதாய்முதலான வகிலப்ரபஞ்சந்
தனைத்தந்ததெனதாசையோ
தன்னையேநோவனோ பிறரையேநோவனோ
தற்காலமதைநோவனோ
பந்தமானதுதந்த வினையையேநோவனோ
பரமார்த்தமேதுமறியேன்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௭)

வாராததெலாமொழிய வருவனவெலாமெய்த
மனதுசாக்ஷியதாகவே
மருவநிலைதந்ததும் வேதாந்தசித்தாந்த
மரபுசமரசமாகவே
பூராயமாயுணர ஆகமமுதந்ததும்
பொய்யுடலைநிலையன்றெனப்
போதநெறிதந்ததுஞ் சாசுவதவானந்த
போகமேவீடென்னவே

ஆசைக்கோரளவில்லையகிலமெல்லாங்கட்்டி
யாளினுங்கடன்மீதிலே
யாணைசெலவேநினைவ ரளகேசநிகராக
வம்பொன் மிகவைத்தபேரு
நேசித்துரசவாத வித்தைக்கலைந்திடுவர்
நெடுநாளிருந்தபேரு
நிலையாகவேயினுங் காயகற்பந்தேடி
நெஞ்சுபுண்ணாவரல்லால்
யோசிக்கும்வேளையிற் பசிதீரவுண்பது
முறங்குவதுமாகமுடியு
முள்ளதேபோதுநா னானெனக்குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக்கடற்குளே வீழாமன்மனதற்ற
பரிசுத்தநிலையையருள்வாய்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற
பரிபூரணானந்தமே (௧)

---

## பொருள் வணக்கம்.

நித்தியமாய்நின்மலமாய் நிட்களமாய்நிராமயமாய்
நிறைவாய்நீங்காச்
சுத்தமுமாய்த்தூரமுமாய்ச்சமீபமுமாய்த்துரியநிறை
சுடராயெல்லாம்

வைத்திருந்ததாரகமா யானந்தமயமாகி
மனவாக்கெட்டாச் [ஸை
சித்துருவாய்நின்றவொன்றைச்சுகாரம்பப்பெருவெளி
சிந்தைசெய்வாம். (க)

ஊாதுமனமிணையுமந்த நினைவுக்குநினைவாகி
யாதின்பாலும்
வேதமறநின்றவிருக்குமிராவியன்பருக்கே
போரானந்த [னைக்
கோதிலமுதூற்றரும்பிக் குணங்குறியொன்றறத்தன்
கொடுத்துக்காட்டுங்
நீதிப்பராபரமான சித்தாந்தப்பேரொளியைச்
சிந்தைசெய்வாம். (உ)

பெருவெளியாயைம் பூதம் பிறப்பிடமாய்ப்பேசாத
பெரியமோனம்
வருமிடமாய்மனமாதிக் கெட்டாதபேரின்ப
மயமாய்ஞானக் [இக்
குருவருளாற்காட்டிடவுமன்பரைக் கோத்தறிமூன்
கொண்டப்பாலுங் [ளினியாங்
தெரிவரிதாய்க்கலந்தநித்தப் பொருளாந்தப் பொரு
சிந்தைசெய்வாம். (ங)

இகபரமுமுயிர்க்குயிரை யானெனதற்றவருளை
யெந்தாளுஞ்

உம் தாயுமானஸ்வாமிகள் பாடல்.

சகலபரிபூரணமான நிராலம்பகோசரத்தைத்
துரியவாழ்வை
சுகமகிழ்வருக்கீந்தினை முக்திநிலையைக்கற்கண்டை
யமிர்தைநாடி [கண்
மொருபொருளெனவிருவிழிநீர் முத்திரைப்பக்தமலர்
மூழ்த்தூவிற்பாம் (௧)

சாதிகுலம்பிறப்பிறப்புப் பந்தமுத்திஅருவுருவத்
தன்மைநாம
மேதுமின்றிஎப்பொருட்குமெவ்விடத்தும்பிரிவற
நின் றியக்கஞ்செய்யுஞ்
சோதியைமாத்தூவெளியை மனதவிழநிறைவான
துரியவாழ்வைத்
தீதில்பரமம்பொருளைத் திருவருளேநினைவாகச்
சிந்தைசெய்வாம். (௨)

இந்திரசாலங்கனவு கானலின்நீரெனவுலக
மெய்மைகருதாந்தான்றச்
சந்ததமுஞ்சிற்பரத்தா லழியாததற்பரத்தைச்
சார்ந்துவாழ்க
புந்திமகிழுறகளுக் தடையறவானந்தவெள்ளம்
பொழிக்வெனவே
வந்தருளுக்குருமௌனி மலர்த்தாளையனுதினமும்
வழுத்தலம்செய்வாம். (௩)

பொருளாகக்கண்ட பொருளெவைக்குமுதற்பொரு
ளாகிப் போதமாகித்
தெருளாகிக் கருத்தமன்பர் மிடிதீரப்பழுத்த
செழுந்தேறலாகி
யருளார்நோக்கப்புறமென் றுன்னாதபூரணவா
னந்தமாகி
யிருளாதுவிளங்குபொருளியாதந்தப்பொருளினையா
மிறைஞ்சிநிற்பாம் (எ)

அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர்மாமுனி
வர்சித்த ராதியானோர்
தெரிவரியபூரணமாய்க் காரணக்கற்பனைகடந்த
செல்வமாகிக்
கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்
போற், கலந்தெங்கணுந்
துரியநிறைந்தபெரியபொருளியாததனைத்
தொழுதல்செய்வாம். (அ)

நின்றநிலைபூதமெல்லாந் தன்னகத்திலடக்கிவெறு
வெளியாய்ஞானக்
கண்ணாலேகண்டவன்பர் கண்ணூடேயானந்தக்
கடலாய்வெள்ளென்
றென்னைப்படிக்கிரங்கித் தானாகச்செய்தரு
மிறையேயன்றன்

றண்ணுந்தஞ்சாந்தவரு டனைநினைந்துகரமலர்க
டலைமேற்கொள்வாம். (கூ)

விண்ணிறைந்தவெளியா யென்மனவெளியிற்கலந்த
திவாம், வெளியினூடே
தண்ணிறைந்தபேரமுதாய்ச் சதானந்தமானபெருந்
தகையேநின்பா
லுண்ணிறைந்தபேரன்பா லுள்ளுருகிமொழிகுளறி
யுவகையாகிக்
கண்ணிறைந்தபுனலுகுப்பக்காமுகிப்பநின்னருளைக்
கருத்தில்வைப்பாம். (௰)

(வேறு.)

ஆதியந்தங்காட்டாதமுதலாயெம்மை
யடிமைக்காவளர்த்தெடுத்தவன்னைபோல
நீதிபெருங்குருவாகி மனவாக்கெட்டா
நிச்சயமாய்ச்சொச்சமதாய்நிலமாகி
வாதமிடுஞ்சமயநெறிக்கரியதாகி
மௌனத்தோர்பால் வெளியாய்வழங்காநின்ற
சோதியையென் னுயிர்த்துணையை நாடிக்கண்ணீர்
சொரியவிருகரங்குவித்துத் தொழுதல்செய்வா (ம்)

அகரவுயிரெழுத்தனைத்துமாகிவேறா
யமர்ந்தெனவகிலாண்ட மனைத்துமாகிப்
பகர்வனவெல்லாமாகியல்லவாகிப்
பரமாகிச்சொல்லரியபான்மையாகித்

ஒளருசங்கற்பவிகற்பங்களெல்லாந்
    தேயாதவறிவாகிச்சுத்தமாகி
கேள்விப்பசுபதியான பொருளைநாடி
    கெட்டுயிர்த்தப்பேரன்பா னினைதல்செய்வாம்.

---

## சின்மயானந்தகுரு.

அங்கைகொடுமலர்தூவி யங்கமதுபுளகிப்ப
    வன்பினொடுருகிவிழிநீ
ராறாகவாராத முத்தியினதாவேச
    வாசைக்கடற்குண்மூழ்கி
சங்கரசுயம்புவேசம்புவேயெனவுமொழி
    தழுதழுத்திடவணங்குஞ்
சன்மார்க்கநெறியிலாத் துன்மார்க்கனேனையுந்
    தண்ணருள்கொடுத்தாள்வையோ
துங்கமிகுபக்குவச் சனகன்முதன்முனிவோர்க
    டொழுதருகில்வீற்றிருப்பச்
சொல்லரியநெறியையொருசொல்லாலுணர்த்தியே
    சொருபானுபூதிகாட்டிச்
செங்கமலபீடமேற் கல்லாலடிக்குள்வளர்
    சித்ராந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
    சின்மயானந்தகுருவே. (க)

ஐந்துவகையாகின்றபூதபேதத்தின்
லாகின்றவாக்கைநீர்மே
லாகின்றகுமிழியெனநிற்கின்றதென்னநா
னறியாதகாலமெல்லாம்
புத்திமகிழுறவுண்டுடுத்தின்பமாவதே
போக்கநெறியென்றிருந்தேன்
பூராயமாகநினதருள்வந்துணர்த்தவிவை
போனவழிதெரியவில்லை
யெந்தநிலைபேசினுமிணங்கவிலையல்லா
லிறப்பொடுபிறப்பையுள்ளே
யெண்ணினெஞ்சந்திடுக்கென்னுந்துயிலுரா
திருவிழியுமிரவுபகலாய்ச்
செந்தழலின்மெழுகாகுதந்தமிவையென்கொலோ
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (௫)

காரிட்டவாணவக்கருவறையிலறிவற்ற
கண்ணிலாக்குழவியைப்போற்
கட்டுண்டிருந்தவெமைவெளியில்விட்டல்லலாங்
காப்பிட்டதற்கிசைந்த
பேரிட்டுமெய்யென்றுபேசுபாழ்பொய்யுடல்
பெலக்கவினையமுதமூட்டிப்
பெரியபுவனத்தினிடைபோக்குவரவுறுகின்ற
பெரியவிளையாட்டமைத்திட்

தேடிட்டதன்சுருதிமொழிதப்பின்மனைவிட்
டிடருறவுறக்கிவிடாத்தீர்த்
திரவுபகலில்லாதபேரின்பவீட்டினில்
இசைந்துதுயில்கொண்டிடென்று
சீரிட்டவுலகன்னைவடிவான்வெந்தையே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (சு)

கருமருவுகுகையனையகாயத்தினைவெட்
களிம்புதோய்செம்பனையயான்
காண்டகவிருக்கநீஞானவனன்மூட்டியே
கனிவுபெறவுள்ளுருக்கிப்
பருவமதறிந்துநின்னருளானகுளிகைகொடு
பரிசித்துவேதிசெய்து
பத்தரைமாற்றுத்தங்கமாக்கியேபணிகொண்ட
பக்ஷத்தையென்சொல்லுவேன்
ஒருமைபெருபுகழ்பெற்றவேதாந்தசித்தாந்த
மாதியாமந்தமீது
மத்துவிதநிலையராயென்னையாண்டுன்பெருமை
யாவர்களறிகுவார்
திருமருவுகல்லாலடிக்கீழும்வளர்கின்ற
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (எ)

கூடுதலுடன்பிரிதலற்றுநிர்த்தொந்தமாய்
குவிதலுடன்விரிதலற்றுக்
குணமற்றுவரவினொடுபோக்கற்றுநிலையான
குறியற்றுநாமமற்று
நாடுதலுமற்றுச்சலிப்பற்றுப்பக்கமென
நண்ணுதலுமற்றுநித்த
நாதமற்றைவகைப்பூதபேதமுமற்று
ஞாதுருவின்ஞானமற்று
வாடுதலுமற்றுமேலொன்றற்றிரண்டற்று
வாக்கற்றுமனமுமற்று
மன்னுபரிபூரணச்சுகவாரிதன்னிலே
வாய்மடுத்துண்டமையத்
தேடுதலுமற்றவிடநிலையென்றுமௌனியே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (௮)

தாராதவருளெலாந்தந்தருளுமௌனியாய்த்
தாயனையகருணைகாட்டித்
தாளிணையென்முடிசூட்டியறிவிற்சமாதியே
சாசுவதசம்பிரதாயம்
மோராமன்மந்திரமுமுன்னுமன்முத்திநிலை
யொன்றேயிரண்டெனாமை
யொளியெனவும்வெளியெனவுமுருவெனவும்நாதமா
மொலியெனவுமுணர்வுறாமல்

பாராது பாரப்பரித் [illegible] ஞானமற்ற
        பரமகுரு பூதிவாய்க்கும்
பண்பென்றுணர்த்திய பாதாமலர்க்கிலே
        பதிந்தவின பழவடியர்க்கு
சிரவிருக்கவினை தருணமென்றுமையனே
        சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
        சின்மயானந்தகுருவே. (௯)

போதமாயாதிநடு வந்தமுமிலாததாய்
        புனிதமா யவிகாரமாய்ப்
போக்குவரவில்லாத வின்பமாய்நின்றநின்
        பூரணம் புகலிடமதாய்
ஆதாரவுமையாம லறிவினைமறைப்பதா
        மருள்பின்னு மறிவின்மைதீர்த்
தறிவித்திருப்பதா மருளாகிலெளியனேற்
        கறிவாவ தேதறிவிலா
வேதம்வரும்வகைமேவு வினையேது வினைதனக்
        கிடமான காயமேதென்
இச்சாசுதந்தரஞ் சிறிதுமிலையிகபர
        மிரண்டினும் பலவுதித்
திலருள்கொண்டினியுணர்த்தியெனையாள்வையோ
        சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
        சின்மயானந்தகுருவே. (௰)

பொன்னையுமியா தவ்வளர்பொருளென் றுபோற்றிசிப்
பொய்வேடமிருதிகாட்டிப்
பொறையறிவுதுறவீத லாதிநற்குணமெலாம்
போக்கிலேபோகவிட்டுத்
தன்னிகரிலாயாதி பாழ்ம்பேய்பிடித்திடத்
தரணிமிசைலோகாயதன்
சமயநடைசாராமல் வேதாந்தசித்தாந்த
சமரசசுவாநுபூதி
யன்னவொருசொற்கொண் டெனைத்தடுத்தாண்டன்
பின் வாழ்வித்தஞானகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (௪)
போனகமிருக்கின்ற சாலையிடைவேண்டுவ
புசித்தங்கிருக்குமதுபோற்
புருஷர்பெருதர்மாதி வேதமுடனாகமம்
புகலுமதிலாம்பயனை
ஞானநெறிமுக்யநெறி காட்சியனுமானமுக
நுனுவிதங்கண்டோர்ந்து
நானெனக்குளறிபடையுடைபெயர்த்திடவு
நான்குசாதனமுமோர்ந்திட்
டானநெறியாஞ்சரியை யாதிசோபானமுற்
றனுபக்ஷசப்புஉக்ஷம்
ஆயிருவிகற்பமு மாயாதிசேனையு
மறிந்திரண்டொன்றமோர்ந்து

மானதவிகற்பமறவென்று நிற்பதுகமது
  மரபென்றபரகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
  மரபில்வருமௌனகுருவே (௭)

அல்லாதவறிவுமேற் கேளாதகேள்வியுங்
  கருணைசிறிதேனுமில்லாக்
காட்சியுங்கொலைகளவு கட்காமமாட்சியாய்க்
  காதலித்திடுநெஞ்சமும்
பொல்லாதபொய்ம்மொழியு மல்லாதநன்மைகள்
  பொருந்துகுணமேதுமறியேன்
புருஷவடிவானதே யல்லாதுவினையினும்
  புருஷார்த்தமேதுமில்லேன்
எல்லாமறிந்தநீ யறியாததன்றெனக்
  கெவ்வண்ணமுய்வண்ணமோ
இருளையிருளென்றவர்க் கொளிதாரகப்பெறு
  மௌனகுருவின்னருடாரகம்
வல்லானெனும்பெய ருனக்குள்ளதேபித்த
  வஞ்சகனையாளநினையாய்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
  மரபில்வருமௌனகுருவே. (௮)

கானகமிலங்குபுலி பசுவொடுகுலாவுநின்
  கண்காணமதயானைநீ
கைகாட்டவுங்கையா னெகிடிக்கெனப்பெரிய
  கட்டைமிகவேட்டிவருமே

போனகமமைந்ததென வாக்காமதேனுவின்
பொன்னடியினின்றுசொலுமே
புவிராசர்கவிராசர் தவராஜரென்றுனைப்
போற்றிஜயபோற்றியென்பார்
ஞானகருணாகர முகங்கண்டபோதிலே
நவநாதசித்தர்களுமுன்
நட்பினைவிரும்புவார் சுகவாமதேவர்முதல்
ஞானிகளுமுனைமெச்சுவார்
வானகமுமண்ணகமும் வந்தெதிர்வணங்கிடுமுன்
மகிமையதுசொல்லவெளிதோ
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (௭)

சருகுபலபக்ஷிகளொருகோடியல்லாற்
சகோரபக்ஷிகள்போலவே
தவளநிலவொழுகமிர்த தாரையுண்டறியாத
தன்மையரனந்தங்கோடி
இருவினைகளற்றிரவு பகலென்பதறியாத
வேதாந்தமோனஞான
இன்பநிஷ்டையர்கோடி மணிமந்த்ரசித்தியில்
எய்தினர்கள்கோடிசூழக்
குருமணியிழைத்திட்ட சிங்காதனத்தின்மிசைக்
கொலுவிற்றிருக்குநின்னைக்
கும்பிட்டனந்தமுறை தெண்டனிட்டென்மனக்
குறையெலாந்திரும்வண்ணம்

மருமலரெடுத்துநின் றாளையர்ச்சிக்கவெனை
　　வாவென்றழைப்பதெந்நாள்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
　　மரபில்வருமௌனகுருவே. (௪)

ஆங்காரமானகுல வேடவெம்பேய்பாழ்த்த
　　வாணவத்தினும் வலிதுகாண்
அறிவினைமயக்கிடு மெய்வறியவொட்டாதி
　　யாதொன்று தொடினுந்தாவாய்த்
தாங்காதுமொழிபேசு மகிசரப்பிரமாதி
　　தப்பொடுசமானமென்னுந்
தடையற்றதேசிலஞ் சுருவாணிபோலவே
　　தன்னிலசையாதுநிற்கும்
சங்காரனெனக்குமிக ரெண்ணைப்ரதாபித்
　　திராவணாகாரமாகி
இதயவெளியெங்ஙணுந் தன்னரசுநாடிசெய்
　　திருக்குமிகனவுகோரமும்
வாங்காவிலாதடிமை போராடமுடியுமோ
　　மௌனோபதேசகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
　　மரபில்வருமௌனகுருவே. (௫)

பற்றுவெகுவிதமாகி பொன்னைவிட்டொன்றினைப்
　　பற்றியுழல்கிருமிபோலப்
பாழ்சிந்தைபெற்றனுன் வெளியாகநின்னருள்
　　பகர்ந்துமறிவென்றனிதமோ

சிற்றறிவதன்றியு மெய்ஞ்ஞானமொருமொழி
இதுக்கென் றுரைத்தபோது
சிக்ஷைசெவியாகவே பறையுறையவுதரவெங்
நிநெஞ்சமளவளாவ
உற்றுணாவுணர்வற்றன் மத்தவெறியினர்போல
வுராறுவேன் முத்திமார்க்கம்
உணர்வதெப்படியிப் புன்பஞ்சமாசமா
யுறுவதெப்படியாயினு
மற்றெனக்கையநீ சொன்னவொருவார்த்தைதனி
மலையிலக்கெனநம்பினேன்
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே. (௰)

---

## கருணாகரக்கடவுள்.

நிர்க்குணநிராமய நிரஞ்சனநிராலம்ப
நிர்விஷயகைவல்யமா
நிஷ்களவசங்கசஞ் சலரகிதநிர்வசன
நிர்த்தொந்தநித்தமுக்த
தற்பரவிஸ்வாதீத வ்யோமபரிபூரண
சதானந்தஞானபகவ
சம்புசிவசங்கர சர்வேசவென் றுநான்
சர்வகாலமுநினைவனோ

அற்புதவகோசர விவர்த்தபெருமன்பருக்
கானந்தபூர்த்தியான
அத்தவிதநிச்சய சொரூபசாக்ஷாத்கார
வநுபூதியனுக்ரகமுந்
தற்பரியறக்காண முக்கணுடன்வடவிழற்
கண்ணாடிருந்தகுருவே
சருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (க)

மண்ணாதிரைங்தொடு புறத்திலுளகருவியும்
வாக்காதிகன்மேந்த்ரியும்
வளர்கின்றசப்தாதி பஞ்சவிஷயங்களும்
பஞ்சசுத்தாதியுட்னே
தொண்ணூற்றொடாறுமற்றுள்ளனவுமௌனியாய்ச்
சொன்னவொருசொற்கொண்டதே
தூயவெளிதாயகண் டானந்தசுகவாரி
தோற்றுவதையென்சொல்லுவேன்
பண்ணாருமிசையினொடு பாடிப்படித்தருட்
பான்மைநெறிநின்றுதவராய்ப்
பக்குவவிசேஷராய் நெக்குநெக்குருகிப்
பணிந்தெழுந்திருகைகூப்பிக்
கண்ணாறுகரைபுரள நின்றவன்பரையெலாங்
கைவிடாக்காட்சியுறவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (உ)

எல்லாமுனடிமையே யெல்லாமுனுடைமையே
    எல்லாமுனுடையசெயலே
எங்கணும்வியாபிநீ யென்றுசொலுமியல்பென்
    றிருக்காதிவேதமெல்லாஞ்
சொல்லான்முழக்கியது மிக்கவுபகாரமாய்ச்
    சொல்லிருந்தவரும்விண்டு
சொன்னவையுமிவையல்ல குருவானபேருந்
    தொகுத்தநெறி தானுமிவையே
அல்லாமலில் லையென நன்றாவறிந்தே
    னறிந்தபடி நின்றுசுகநான்
ஆகாதவண்ணமே யிவ்வண்ணமாயினே
    னதுவுமினதருளென்னவே
கல்லாதவறிஞனுக் குள்ளேயுணர்த்தினே
    கதிக்குவகையேதுபுகலாய்
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
    கருணாகரக்கடவுளே, (௩)

பட்டப்பகற்பொழுதையிருளென்றமருளர்தம்
    பக்ஷமோவெனதுடக்ஷம்
பார்த்தவிடமெங்கணும் போதநிலைகுலையாது
    பரமவெளியாகவொருசொற்
றிட்டமுடன்மௌனியாயருள்செய்திருக்கவுஞ்
    சேராமலாரகனான்
சிறுவீடுகட்டியதினடுசோற்றைபுண்டுண்டு
    தேக்குசிறியார்கள்போல்

நட்டணைபதாக்கற்ற கல்வியும்விவேகமு
கன்னிலயமாகவுன்னி
நானென்றுநீயென் றிரண்டில்லையென்னவே
நடுவேமுளைத்தமனதைக்
கட்டவறியாமலே வாடினேனெப்போது
கருணைக்குரித்தாவனோ
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (௪)

மெய்விடாதவுள்ள மெய்பொருளிருந்துநீ
மெய்யானமெய்மையெல்லாம்
மெய்யெனவுணர்த்தியது மெய்யிதற்கையமில்லை
மெய்யேதுமறியாவெறும்
பொய்விடாப்பொய்யினேனுள்ளத்திருந்துதான்
பொய்யானபொய்மையெல்லாம்
பொய்யெனவுண்மை புலனாக்காவெனிற்
புன்மையேனென்செய்குவேன்
மைவிடாதெழுநீல கண்டகுருவேவிஷ்ணு
வடிவானஞானகுருவே
மலர்மேவிமறையோது நான்முகக்குருவே
மதங்கடொறுநின்றகுருவே
ஐவிடாதேவென்ற வன்பருக்கன்பாய்க்
கருத்தூடுணர்த்துகுருவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (௫)

பண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே
	பாவித்திறைஞ்சவாங்கே
பார்க்கின்றமலருநீயேயிருத்தியப்
	பனிமலரெடுக்கமனமும்
நண்ணேனலாமலிருகைதான்குவிக்கவெனி
	னாணுமென்னுளநிற்றிநீ
நான்கும்பிடும்போதரைக்கும்பிடாதலா
	னான்பூசைசெய்யன்முறையோ
விண்ணேவிணாதியாம் பூதமேநாதமே
	வேதமே வேதாந்தமே
மேதக்கசேள்வியே கேள்விபூடிக்கருள்
	வித்தேயனாதிமுதலே
கண்ணேகருத்தேயென் னெண்ணேயெழுத்தே
	கதிக்கானமோனவடிவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
	கருணாகரக்கடவுளே		(௫)

சந்ததமும்வேதமொழி யாதொன்றுபற்றினது
	தான்வந்துமுற்றுமெனலால்
சகமீதிருந்தாலு மரணமுண்டென்பது
	சதாநிஷ்டர் நினைவதில்லை
சிந்தையறியார்க்கிது போதிப்பதல்லவே
	செப்பினும் வெகுதர்க்கமாம்
இவ்வருணமார்க்கண்டர் சுகாதிமுனிவர்கள்
	சித்தாந்தசித்பரலரோ

யிந்த்ராதிதேவதைகள் பிரமாதிகடவுள
ரிருக்காதிவேதமுனிவர்
எண்ணரியசனகாதர் நவநாதசித்தர்க
ளிரவிமதியாதியோர்கள்
கந்தருவர்கின்னரர்கண் மற்றையர்கள்யாவருங்
கைகுவித்திடுதெய்வமே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (எ)

துள்ளுமறியாமனதை பலிகொடுத்தேன்கன்ம
துஷ்டதேவதைகளில்லை
துரியநிறைசாந்ததே வதையாமுனக்கே
தொழும்பனன்பபிஷேகநீர்
உள்ளுறையிலென்னுயிர் நைவேத்யம்ப்ராண
னோங்குமதிரூபதீப
மொருகாலமன்றிது சதாகாலபூசையா
வொப்பிவைத்தேன் கருணைகூர்
தெள்ளிமறைவடிகட்டி வமுதப்பிழம்பே
தெளிந்ததேனே சீனியே
திவ்யரசம்யாவுந் திரண்டொழுருபாகே
தெவிட்டாதவானந்தமே
கள்ளனறிவூடுமே மெள்ளவெளியாய்வந்து
கலக்கவருநல்லவுறவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே. (அ)

செடியமுகிலேழும்பரந் தாவருஷிக்கிலோ
நிலவுமதிமண்டலமதே
ஊரெனவிளக்குவீர்பிரமாதிமுடிவில்விடை
யூர்தியருளாலுலவுவீர்
உலகங்கள்கீழ்மேலதாகப்பெருங்காற்
றுலாவிற்றூறணைபிறன்
மேருவெனவசையாமனிற்கவல்லீருமது
மேதக்கசத்திவெளித்தா
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௫)

எண்ணரியபிறவிதனின் மானிடப்பிறவிதான்
யாதினுமரிதரிதுகாண்
இப்பிறவிதப்பினெப்பிறவிவாய்க்குமோ
வேதுவருமோவறிகிலேன்
கண்ணகலிலத்தனுள்ளபொழுதேயருட்
ககனவட்டத்தினின்று
காலூன்றிநின்றுபொழிபானந்தமுகிலொடு
கலந்துமதியவசமுறவே
பண்ணுவதுனன்மைசிங்கிலைபதியுமட்டுமே
பதியாயிருந்ததேகப்
பவுரிகுலையாமலேகௌரிகுண்டலையாயி
பண்ணவிதனருளினாலே
விண்ணிலவுமதியமுதமொழியாதுபொழியவே
வேண்டுவேனுனதடிமைநான்

வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௪)

பொய்திகழுமுலகநடைமென்சொல்கேனென்சொல்
கேன்,பொழுதுபோக்கேதென்னிலோ
பொய்யுடல்மிகத்தம்புசிப்புக்கலைந்திடல்
புசித்தபின்கண்ணுறங்கல்
கைதவமலாமலிதுசெய்தவமதல்லவே
கண்கெட்டபேர்க்கும்வெளியாய்க்
கண்டநிதுவின்டிகைகண்டித்துநிற்றலெக்
காலமோவதையறிகிலேன்
மைதிகழுமுகில்னக்குடைநிழற்றிடவுற்ற
வரைமிஞெடுசெம்பொன்மேரு
மால்வரையின்முதுகூடும்யோகதண்டக்கோல்
வரைந்துசயவிருதுகாட்டி
மெய்திகழுமஷ்டாங்கயோகபூமிக்குள்வளர்
வேந்தரேகுணசாந்தரே
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௫)

கேசதுரக்முதலானசதுரங்கமனமாதி
கேள்விபிணிசைந்துநிற்பக்

கெடிகொண்டதலமாறும்மண்டலத்திலுங்
 இள்ளாக்குசெல்லமிக்க
தெசவிருமந்தாய்நின்றநாதங்களோர்விடச்
 சிங்காசனாதிபர்களாய்த்
திக்குத்திகந்தமும்பூரணமதிக்குடை
 திகழ்ந்திடவசந்தகால
மிசையமலர்மீதுறை மணம்போலவானந்த
 மிதயமேற்கொள்ளும்வண்ண
மென்றைற்குபழியாதசிவராசயோகமா
 யிந்த்ராதிதேவர்களெல்லாம்
ஜைசயசயவென்னவாழிசொலவேசொலு
 விருக்கினும்பெருமையெளிதோ
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
 வித்தகச்சித்தர்கணமே. க

ஆணிலேபெண்ணிலேயென்போல்வொருபேதை
 யகிலத்தின்மிசையுள்ளதோ
வாடியகறங்குபோலோடியுழல்சிந்தையை
 யடக்கியொருகணமேனும்யான்
காணிலன்றிருவருளையல்லாதுமௌனியாய்க்
 கண்மூடியோருமூச்சைக்
கட்டிக்கலாமதியைமுட்டவேமூலவெங்
 கனலினையெழுப்பநினைவும்
பூணிலேனிற்றைநாட்கற்றதுங்கேட்டதும்
 போக்கிலேபோகவிட்டு

பொய்யுலகனுபவமே னுபவங்கடையான
புன்மையே யின்னுமின்னம்
வீணிலேயலையாமன் மலையிலக்காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. (எ)

அன்னலமுதெனவுமுக்கனியெனவும்வாயூற
கண்டளவு மடியெடுத்துக்
கடவுளர்கடந்தநல வமுதமுதுபேய்போற்
காத்திசெழு கின்றவெல்லா
மென்னதரியாமையறி வென்னுமிருபகுதியா
லீட்டுதமி ழென்றமிழினுக்
கின்னல்பகராதுலக மாரிமையிமேலிட்
டிருத்தலா மித்தமிழையே
சொன்னவனியாவனவன் முத்திசித்திகளெலாந்
தோய்ந்தநெறி யேபடித்தீர்
சொல்லுமெனவவர்நீங்கள் சொன்னவவைபிற்சிறிது
தோய்ந்தருண சாந்தனெனவே
பின்னல்பெறவேசொல்லவச்சொல்கேட்டடிமைமன
விகசிப்ப தெந்தநாளோ (ம்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. (அ)

பொற்பிறுநிலைககாலில் வள்ளுகிர்படைத்தலாற்
போந்திடை யொடுக்கமுறலாற்
பொலிவானவெண்ணீறு பூசியேயருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையா
வெற்படவிளங்குகக னத்திலிமையாவிழி
யிசைந்துமே னோக்கமுறலா
லிரவுபகலிருளான கனதந்திபட நூறி
யிதயங்களித்திடுதலாற்
பற்பலவிதக்கொண்ட புலிகலையினுரிபத
படைத்துப்ரதாப முறலாற்
பணிவெயில்கள்புகுதாமனெடியவான்றொடர்செடிய
பருமரவனங்களாரும்
வெற்பினிடையுறைதலாற் றவராசசிங்கமென
மிக்கோருமைப்புகழ்வர்காண்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. (௬)

அல்லாதபேர்களே நல்லவர்களல்லவர்கள்
கற்றுமறி வில்லாதவென்
கர்மத்தையென்சொல்வேன் மதியையென்சொல்லு
வேன் கைவல்ய ஞானநீதி
நல்லோருரைக்கிலோ கர்மமுக்கியமென்று
நாட்டுவேன் கன்மமொருவ
ஞட்டிருலோபழைய ஞானமுக்கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே

வல்லாரொருத்தர்வர வுந்தராவிடத்திலே
வந்தநா விவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரி னக்கணேவடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாமலெவரையு மருட்டிவிடவகைதந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. (௰)

---

## ஆனந்த மானபரம்.

கொல்லாமையெத்தனை குணக்கேட்டைநீக்குமக்
குணமொன்று மொன்றறிகிலேன்பாற்
கோரமெத்தனைபட்ச பாதகமெத்தனையுமவன்
குணங்களெத்தனை கொடியபாழ்ங்
கல்லாமையெத்தனை யகந்தையெத்தனைமனக்
கள்ளமெத் தனையுள்ளசத்
காரியஞ்சொல்லிடு மறியாமையெத்தனை
கறிக்கென் றமைத்தவருளிற்
செல்லாமையெத்தனை வித்தாகோஷ்டியென்னிலோ
செல்வமெத் தனைமுயற்சி
சிந்தையெத்தனைசலன மிந்த்ரஜாலம்போன்ற
தேசத்தில் வாஞ்சைமுதலா

வாயுவை யடக்கியு மனதினை யடக்கியு
    மௌனத்திலே யிருந்து
மதிமண்டலத்திலே கனல்செல்ல வமுதுண்டு
    வனமூடிருந்தாமற்று
ராயுமறைமுடிவான வருணாடி நாடிமை
    யகிலத்தை நாடன்முறையோ
வண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி
    யானந்தமான பரமே. (௪)

சத்தமு மசத்தமுந் துக்கசுகபேதமுந்
    தொந்தமுட னிர்த்தொந்தமும்
ஸ்தூலமொடு சூக்ஷமு மாசையு நிராசையுஞ்
    சொல்லுமொரு சொல்லின்முடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமொடு பாசமும்
    பேதமொடு பேதமிலையும்
பெருமையொடு சிறுமையும் அருமையுடனெளிமை(யும்)
    பெண்ணினுட னாணுமற்று
நித்தமு மநித்தமு மஞ்சனநிரஞ்சனமு
    நிஷ்களமு நிசகளமு
நீதியு மநீதியு மாதியொடனாதியு
    நிர்விஷய விஷயவடிவு
மத்தனையு நீயலதெ ளத்தனையு மில்லையெனின்
    யானென்பதன்றியுண்டோ
வண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி
    யானந்தமான பரமே. (௫)

காராருமாணவக் காட்டைக்களைந்தறக்
கண்டகங் காரமென்னுங்
கல்லைப்பிளந்துநெஞ் சகமானபூமிவெளி
காணத்திருத்தி மேன்மேற்
பாராதியறியாத மோனமாம்வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகுமட்டு மாமாயைவன்
பறவையணு காதவண்ணம்
நேராகநின்றுவிளை போகம்புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின்படிக்குநீ முன்னின்றுகாப்பதே
நின்னருட் பாரமென்றும்
யாராருமறியாத சூதானவெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே (௫)

வானாதிபூதமா யகிலாண்டகோடியாய்
மலையாகி வளைகடலுமாய்
மதியாகிரவியாய் மற்றுளவெலாமாகி
வான்கருணை வெள்ளமாகி
நானாகிநின்றவனு நீயாகிநின்றிடவு
நானென்பதற்றிடாதே
நானெனக்குளறி நானுஞ்சரியாய்
நானறிந் தறியாமையாய்

போனாலிட்டவலி வெல்லவெளிதோயகற்
　　பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொய்த்துயில் கொள்வான்றனை யெழுப்பவசமோ
　　வினிப் போதிப்பதெங்ஙனெறியை
ஆனாலுமென்கொடுமை யனியாயமனியாய
　　மார்பாலெடுத்து மொழிவே
னண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
　　யானந்தமானபரமே. (எ)

பொய்யினேன்புலையினேன்கொலையினேனின்னருள்
　　புலப்படவறிந்திலேயாப்
புன்மையேன்கல்லாத தன்மையேனன்மைபோற்
　　பொருளலாப்பொருளோடும்
வெய்யனேன்வெருளியேன் வெறியனேன்சிறியனே (ன்
　　வினையினே னென்றென்னைநீ
விட்டுவிடநினைவையேற் றட்டழிவதல்லாது
　　வேறுகதியேதுபுகலாய்
துய்யனேமெய்யனே யுயிரினுக்குயிரான
　　துணைவனே யிணையொன்றிலாத்
துரியனே துரியமுங் காணுவதீதனே
　　சுருதிமுடி மீதிருந்த
தையனேயப்பனே யெனுமறிஞரறிவைவிட்
　　டகலாத கருணைவடிவே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
　　யானந்தமான பரமே. (அ)

எத்தனைவிதங்கற்றேன் கற்றிலுங்கேட்டிலுமென்
இதயமு மொடுங்கவில்லை
யானெனுமகந்தைதா னெள்ளளவுமாறவில்லை
யாதினு மபிமானமென்
சித்தமிசைகுடிகொண்ட தீமையோடிரக்கமென்
சென்மத்து நானறிகிலேன்
சீலமொடுதவவிரத மொருகனவிலாயினுந்
தரிசனங்கண்டுமறியேன்
பொய்த்தமொழியல்லான் மருந்துக்குமெய்ம்மொழி
புகன்றிடேன் பிறர்கேட்கவே
போதிப்பதல்லாது சும்மாவிருந்தருள்
பொருந்திடாப் பேதைநானே
பத்தர்குணக்கேடர் கண்டதாக்கேட்டதா
லவனியிலிசை யுண்டோசொலாய்
பண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்த மானபரமே. (௧௰)

எக்காலமுந்தனக் கென்னவொருசெயலிலா
வேழைநீ யென்றிருந்திட்
டெனதாவியுடல்பொருளு மௌனியாய்வந்தகை
யேற்றநமதென்றவன்றே
பொய்க்காலதேகமும் பொய்ப்பொருளில்வாஞ்சையு
பொய்யுடலை மெய்யென்னலும் (ம்
பொய்யுறவுபற்றலும் பொய்யாகுமானென்னல்
பொய்யிலும் பொய்யாகயான்

சொன்னபடி கேட்குமிப் பேதைக்குநின்கருணை
      தோற்றிச்சுகாரம்பமாந்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
      சோதியே சுகவாரியே. (க)

அன்பின்வழியறியாத வென்னைத்தொடர்ந்தென்னை
      யறியாத பக்குவத்தே
பாசைப்பெருக்கைப் பெருக்கிக்கொடுத்துகா
      ணாற்றலைந்தேனென
வன்புலையங்கலே பித்தேற்றிவிட்டா
      யிரக்கமொரு சிறியாயினு
மின்பவெள்ளமாகவந் துள்ளங்களிக்கவே
      யெனைநீ கலந்ததுண்டோ
தன்பருவமலருக்கு மணமுண்டுவண்டுண்டு
      தன்முகை நீக்குமுண்டோ
தமியனேற்கிவ்வணந் திருவுளமிரங்காத
      தன்மையாற் றனியிருக்கு
துன்பமுறுமென்கவலை யறியாதவின்னன்பர்
      சுகம்வந்து வாய்க்குமுறையாச்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
      சோதியே சுகவாரியே. (உ)

கல்லேனுமையவொரு காலத்திலுருகுமென்
      கன்னெஞ்ச முருகவிலையே

பொய்யகலவே விந்த மெய்யென் றகப்பெயென்
புத்திமெசனுமேயபரிலை
நன்பயபவேவோ புதுகாடையையவொரு
சொற்பனத்திலும் வேண்டிலேன்
சத்தியக்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. (௪)

மெய்க்கீர்பொருளிதனுடல் காளின்முட்டைக்கவும்
வெடிக்கென் றசைத்தெழுந்தால்
விழிமைத்தங்கவே தன்னைறுநோக்கியேன்
வேறொன்றைபொருவர்சொல்லி
அக்கோரமைப்பாவென முகவாடிநிற்பதவு
மையகின்னருன்றுபே
பாரூனுமெத்தப்பயத்தவனிபாமென்னை
யாண்டவீ கைவிடாதே
இந்நேரமென்றில் புடற்சமையதாகவு
மெடுத்தா ளிரக்கமென்றே
மெக்கெக்குமொருநீர்வை பாபமுண்டாயினு
மிறைஞ்சுசுகராதியான
தொன்வீர்மையாளர்க்கு மானிடஞ்வருந்தவரு
கிணையென்ற கப்புகின்றேன்
சத்தியக்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியே சுகவாரியே. (௫)

பற்றுவனவற்றிடு நிராசையென்றொருபூமி
பற்றிப்பிடிக்குமியோகப்
பாங்கிற்பிராணலய மென்னுமொருபூமிபினை
பற்றின்மன மறுமென்னவே
சற்றையஞ்சடைமௌனி தானேகனிந்தகனி
கனிவிக்கவந்தகனிபோற்
கண்டறிக்கெறியெனத் திருவுளக்கனிவினொடு
கனியாயிறங்கு மொன்றைப்
பெற்றவனுமல்லேன் பெறாதவனுமல்லேன்
பெருக்கத்தவித்துளறியே
பெண்ணீர்மையென்னவிரு கண்ணீர்நிறைந்துநான்
பேய்போலிருக்க வுலகஞ்
சற்றிகைசெய்யவே பலபலவிட்டாலெனிற்
சொல்லவினி வாயுமுண்டோ
சத்தியக்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியே சுகவாரியே. (௫)

அரும்பொனேமணியேயெ னன்பேயென்பான
வறிவேயென் னறிவிலூறு
மானந்தவெள்ளமே யென்றென்றுபாடினே
னாடினேனாடிநாடி
விரும்பியேகூவினே னுளறினேனலறினேன்
மெய்ச்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரியெனவிரு கண்மாரிபெய்யவே
வேசற்றயர்ந்தேனியா

னிரும்புநேர்நெஞ்சகக் கள்வனேனுமுனை
யிடைவிட்டு நின்றதுண்டோ
வென்றுநீயன்றுநா னுன்னடிமையல்லவோ
யாதேனு மறியாவெறுந்
துரும்பனேனென்னினுங் கைவிடுதனீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியே சுகவாரியே. (௭)

பாராதியண்டங்க ளத்தனையும்வைக்கின்ற
பரவெளியி னுண்மைகாட்டிப்
பற்றுமனவெளிகாட்டி மனவெளியினிற்றோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டிக்
காரணமாய்நிற்க சிச்சிந்தைகாட்டிச்
சதாகால நிஷ்டையெனவே
சுகநிலைகாட்டினை சுகாதீதநிலையந்
தனைக்காட்ட நாள்செல்லுமோ
ஆராரவென்னரு மனந்தகோடிகளினூ
காலூன்றி மழைபொழிதல்போற்
சால்விசிபின்னப் படர்ந்துபரவெளியெலாங்
கப்பியானந்தவெள்ளஞ்
சோராதுபொழியவே கருணையின்முழங்கியே
தொண்டரைக் கூவுமுகிலே
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியே சுகவாரியே.

பேசித்தசமயமோ ரொன்றுசொனபடியொன்று
பேசாது துறவாகியே.
பேசாதபெரியோர்க ணிருவிகற்பத்திநல்
பேசார்கள் பரமகுருவாய்
போதிக்குமுக்கணிறை நேர்மையாய்க்கைக்கொண்டு
போதிப்பதாச்சறிவிலே
போக்குகுரவறவின்ப நீக்கமறவசனமாய்
போதிப்ப தெவனரையனே
சாதித்தசாதனமு மியோகியர்கணமதென்று
சங்கிப்ப ராதலாலே
தன்னிலைதானு மயர்ந்துவிடுவோமெனத்
தனியிருந் திடிலிங்ஙனே
சோதிக்கயுன்மாயை தனையேவினாலடிமை
சுகமான தெப்படிசொலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியே சுகவாரியே. (சுல)

அண்டமுளிதன்னிலோ பகிரெண்டமதனிலோ
வலரிமண்டல நடுவிலோ
வனனடுவிலோவமிர்த மதிநடுவிலோவன்ப
ரகமுருகி மலர்நடுவித்
தெண்டமிடவருமூர்த்தி நிலையிலாதிக்குத்
திகந்தத்திலோ வெளியிலோ
திகழ்விந்துநாதநிலை தன்னிலோவேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ

கண்டபொருளிலேகாணாரிலையெனக்
கண்டருளியமதனிலே
காலமொருமூன்றிலே பிறவினிலதன்னிலே
கருவிகரணங்களாய்ந்த
தொண்டர்களிடத்திலே நீவிற்றிருப்பது
தொழும்பனேற்குளவுபுகலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபராஞ்
சோதியேசகவாரியே ௰

எந்தநாள்கருணைக் குரித்தாளெனவு
மென்னிதய மெண்ணவாட்டுதே
யென்றுசொல்லுவேன் முன்னெடுபின்மலைவரவு
மிற்றவரை யாதுபெற்றேன்
பக்தமானதிட்ட மெழுகாகியுள்ளம்
பதைதுப் பதைத்துருகவோ
பரமசுகமாமது பெறப்பரியதுவரமாய்ப்
பலகாலுமூர்ச்சிப்பதே
சிந்தையானதுமதிலை யென்னறிவிலறிவான
தெய்வமேயனதியுளதோ
தேகமிலையல்லவே புடைப்பல்கப்பலாய்த
திரையாழி யூடுசெலுமோ
சொந்தமாயாண்டநீ யறியார்கள்போலவே
துன்பத்திலாழ்ந்தன்முறையோ
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபராஞ்
சோதியேசகவாரியே. ௧௧

எங்கானுமுடலிலே யுயிராமுனைப்போ
லிருக்கவில்லையோமனமெனு
மியானுமெனனட்பாம் பிராணனுமெய்ம்மைச்சடம்
மென்றுநினைச் சித்தெனறமே
பங்காளிலெவ்வாறு பிரிந்ததனைக்கேட்ட
வன்றுமுதலின்றுவரையு
மறியாயமாயெமை யடைக்குக்குறக்கே
யடர்ந்தரசு பண்ணியெங்கண்
முன்னாகநீயென்னை கோட்டைகொண்டாயென
மூடமன மிகவும்மச
மூண்டெரியுமனவிட்ட மெழுகாயுளங்கருகன்
முறைமையோ பதிறைபரஞ்
சொல்லானுமுன்னரு ளிரங்கவில்லையோவினிச்
சுகம்வருவதெப்படிசொலாய்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே. ௧௨

---

# எங்குநிறைகின்றபொருள்.

அவனன்றியோரணுவுமசையாதெனும்பெரிய
வாப்தர்மொழியொன்றுகண்டா
லறிவாவதேதுசிலவறியாமையேதிவை
யறிந்தார்களறியார்களார்

முன்னிலைமொழிக்கிட னுகண்டிதாகாரமாய்
    முத்திவுமேலுநிற்ப
முன்பின்றொடுகீழ்மே னடுப்பக்கமென்றுமன்
    முற்றுமானந்தநிறைவே
வென்னிலைமையாய்நிற்க வியல்புகூறருள்வடிவ
    மென்றுநும்வாழிவாழி
யிகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி
    யெங்குநிறைகின்றபொருளே. ௧௧

---

## சச்சிதானந்தசிவம்.

பாராதிகணப் பரப்புமுண்டோவென்று
    படர்வெளியதாகியெழுவாய்
பரிதிமதிகாணுஞ் சுயஞ்சோதியாயண்ட
    பகிரண்டவுயிரெலைவைத்து
நேராகவளர்வா யகண்டமாயேகமாய்
    நித்தமாய்நிர்த்தொந்தமாய்
போராதுநிற்றிநீ சும்மாவிருக்கநான்
    பேரின்பமெய்திடாமற்
பேய்மனந்தன்னுடனே நாயலைப்பின்னைபோற்
    பித்தாகவோவென்னைதயாள்

மாதாவாதேய முழுதுநீயாகலா
லகிலமீ தென்னையாட்டி
காலக்கண்டவனுநீ யாடுகின்றவனுநீ
யருளுநீ மௌனஞான
தாதாவுநீபெத்த தாய்தந்தைதாமுநீ
தமருநீ யாவுநீகாண
சர்வபரிபூர ணகண்டதத்துவமான
சச்சிதா னந்தசிவமே. ௰

கொந்தவிழ்மலர்ச்சோலை நன்னீழல்வைகினுங்
குளிர்தீம் புனற்கையள்ளிக்
கொள்ளினுமந்நீரிடைந்திளைத்தாடினுங்
குளிர்சந்தை வாடைமடவார்
வந்துலவுகின்றதென மூன்றிவிடயுலவவே
வசதிபெறு போதும்வெள்ளை
வட்டமதிபட்ட பகற்போலநிலவுகா
மகிழ்போதும் வேலையமுதம்
விந்தைபெறவறுசுவையில வந்ததெனவமுதுண்ணும்
வேளையிலு மாலைகந்தம்
வெள்ளிலையடைக்காய் விரும்பிவேண்டியவண்ணம்
விளையாடி விழிதுயிலினுஞ்
சந்ததமுநின்னருளை மறைவாலரத்தந்து
தமியேனை ரட்சைபுரிவாய்
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
சச்சிதா னந்தசிவமே. ௧௧

## தேசோமயானந்தம்.

மருமலர்ச்சோலைசெறி நன்னீழல்மலையாதி
    மன்னுமுனிவர்க் கேவலாய்
மந்தரமாலிகை சொல்லுமியமநியமதியா
    மார்க்கத்தி னின்றுகொண்டு
கருமருவுகாயத்தை நிர்மலமதாகவே
    கமலாசனாதி சேர்த்துக்
காலைப்பிடித்தனலை யம்மைகுண்டலியடிக்
    கலைமதியி னூடுதாக்கி
உருகிவருமமிர்தத்தை யுண்டுண்டுறங்காம
    லுணர்வான விழியைநாடி
ஒன்றோடிரண்டெனாச் சமரசசொரூபசுக
    முற்றிடவென் மனதின்வண்ணந்
திருவருண்முடிக்கவித் தேகமொடுகாண்பனோ
    தேடரிய சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
    தேசோமயானந்தமே.

இப்பிறவியென்னுமோ ரிருட்கடலின்மூழ்கினா
    னென்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினையெனுந்திரையி னெற்றுண்டுபுற்புத
    வெனக்கொங்கை வரிசைகாட்டுந்
துப்பிதழ்மடந்தையர் மயற்சண்டமாருதச்
    சுழல்வந்து வந்தடிப்பச்

சோராதவல்லைசயர்க் காணுறுவானதி
சுகத்திதென மேனுப்பார்ப்பக்
கைப்பரிசுகாரர்போ லறிவானவஃகமுங்
கைவிட்டு மதிமயக்கிக்
கள்ளவங்கக்காலர் வருவரென்றஞ்சியே
கண்ணருவி காட்டுமெளியேன்
செப்பரியமுத்தியாங் கரைசேரவுங்கருணை
செய்வையோ சத்தாகியென்
சித்தமிசைகுடி கொண்டவறிவானதெய்வமே
தேசோ மயானந்தமே. ௨

தந்தைதாய்தமர்தார மகவென்றுமிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமதிலோ
சந்தேகமில்லையணி மாடமாளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர்வாழ்வுமோ ரிந்த்ரசாலக்கோலம்
வஞ்சனைபொறாமை லோபம்
வைத்தமனமாங்கிருமி சேர்ந்தமலபாண்டமோ
வாஞ்சனையிலாத கனவே
யெந்தநாளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே ௩
யிரவுபக லில்லாதவிடத
தேகமாய்நின்றநின் னருள்வெள்ளிமீதிலே
யானென்ப தறவமுழ்கிச்
சிந்தையானதெளியான சுழலும்வகையென்கொலோ
தேடரிய சத்தாகியென்

பார்த்துமாறிநெஞ் சுருகிநெக்காடவே
யீமைமே யேகமேயெம்
ஆதியேசோதிய யெங்குநிறைகடவுளே
யரசே யெனக்கூவிநான்
வாடாதுமாடுமென் முகவாட்டமுங்கண்டு
வாடா வெனக்கருணைநீ
வைத்திடாவண்ணமே சங்கேதமாவிர்த
வன்மையை வளர்ப்பித்ததார்
தேடாதுதேடவோர் சேட்டற்றதேட்டமே
தேடிய சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. ரு

பிரியாததன்னருட் சிறுஞானியாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்பவுண்மையை யளித்தனையென்மனதறப்
பேரம் பலக்கடவுளாய்
அறிவாயிருந்திடும் நாதவொலிகாட்டியே
யமிர்தப்ர வாகசித்தி
அருளினையலாதுதிரு வம்பலமுமாகியென்னை
யாண்டனைபி னெய்திநெறியாய்க்
குறிதானளித்தனைநன் மரவுரிகொளந்தணக்
கோலமா யசபர்நலம்

கூறினபின் மௌனியாய்ச் சும்மாவிருக்கவென்றே
கூட்டினை யெலாமிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மையாவனோ
தேடறிய சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே.

ஆராரெனக்கென்ன போதிக்கினுமென்னவென்
னறிவினை மயக்கவசமோ
அண்டகோடிகளெலாங் கருப்பவறைபோலவு
மடுக்கடுக் காவமைத்துப்
போமனின்றபர வெளியிலேமனபவனி
பிறங்குவத லாதொன்றினும்
பின்னமுலமருவாது நன்னயத்தாலினிப்
பேரின்ப முத்திநிலையும்
தாராது தள்ளவும் போகாதுலைந்து
தள்ளினும் போகேனியான்
தடையேதுமில்லையாண் டவனடிமையென்னுமிரு
தன்மையிலு மென்வழக்குத்
தீராதுவிடுவதிலை நடுவானகடவுளே
தேடறிய சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோமயானந்தமே.

கந்துகமதக்கரியை வசமாநடத்தலாங்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாமொருசிங்க முதுகின்மேற்கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலினிரதம்வைத் தைந்துலோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர்காணாம லுலகத்துலாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாம்
சந்ததமுமிளமையோ டிருக்கலாமற்றொரு
சரீரத்தினும் புகுதலாம்
சலமேனடக்கலாங் கனன்மேலிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையையடக்கியே சும்மாயிருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட வறிவானதெய்வமே
தேசோ மயானந்தமே அ

எல்லாமறிந்தவரு மேதுமறியாதவரு
மில்லையெனு மிவ்வுலகமீ
தேதுமறியாதவ னெனப்பெயர்தரித்துமிக்
கேழைக்குளேழையாகக்
கல்லாதவறிவிற் கடைப்பட்டநானன்று
கையினூ லுண்மைஞானம்
கற்பித்தநின்னருளி னுக்கென்னகைம்மாறு
காட்டுவேன் கூற்றவனை

அல்லார்ந்தமேனியொடு குண்டிகைப்பிரம்பிற்
றுபாச வடிவமான
அந்தகா நீயொருபகட்டாற் பகட்டுவ
தடாதடா காரம்பாற்
செல்லாதடாவென்று பேசவாயுதுதக்க
செல்வமே சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட அறிவானதெய்வமே
தேசோமயானந்தமே

மின்போலுமிடையோடுபு மொடுபுமென மொழிதல
மென்கிளம் பொலிசேர்ப்ப
வீக்கிப்புடைத்துவிம்முதமையன்னகொங்கைபட
மின்னார்கள் பின்னேவலா
லென்போலலைக்கவர்கள் கற்றோர்கள் கல்லார்க
ளிருவர்களி லொருவருண்டோ
என்செய்கேனம்மமா வெனபாவியென்தெரிமை
யேதென் றெடுத்துமொழியேன்
அன்பாலிபத்துருகி மடியற்றமரமென்ன
வடியிலே விழ்ந்துவிழ்ந்தும்
அடிகளேயுமதடிமை யாக்கவினுனால்வருக்
கறாமர்நிபொரு ளுரைப்பத்
தென்பாலின்முகமாகி வடவாலிருக்கின்ற
செல்வமே சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்ட அறிவானதெய்வமே
தேசோமயானந்தமே ௨

புத்தமிர்தபோகமுங் கற்பகநிழலிற்
பொலிவுற விருக்குமியல்பும்
பொன்னுலகிலயிரா வதத்தேறுவரிசையும்
பூமண்டலாதிக்கமும்
மத்தவெறியினர்வேண்டு மாலென்றுதள்ளவுமே
மாலுமொரு சுட்டுமரவே
வைக்கின்றவைப்பாளன் மௌனதேசிகனென்ன
வந்தனின் னருள்வாழிகாண்
சுத்தபரிபூரண வகண்டமேயேகமே
சுருதிமுடிவானபொருளே
சொல்லரியவுயிரினிடை யங்கங்குநின்றருள்
சுரந்துபொழிகருணைமுகிலே
சித்திநிலைமுத்திநிலை விளைகின்றபூமியே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசைகுடிகொண்டவறிவானதெய்வமே
தேசோமயானந்தமே. ௧௧

---

## சிற்சுகோதயவிலாசம்.

காகமொடுகழு கலகைநாய்நரிகள்
சுற்றுசோறிடு துருத்தியைக்
காலிரண்டுநவ வாசல்பெற்றுவளர்
காமவேள்நடனசாலையை

மோகவாசைமுறி யிட்டபெட்டியைமு
மலமிருந்தொழுகு தேசலியை
மொய்த்துவெங்கிருமி தத்துகும்பியை
முடங்களார் கிடைசரக்கினை
மாகவிந்த்ரதனு மின்னையொத்திலக
வேதமோதியகுலாலனார்
வனைடவெய்யதடி காரனாயமன்
வந்தடிக்குமொருமட்கலத்
தேகமானபொய்யை மெய்யெனக்கருதி
பையவையமிசையாடவோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதய விலாசமே.

குறிகளோடுகுண மேதுமின்றியணு
லொழுக நின்றிடுமிருப்பனற்
கூடலின்றியது வாயிருக்கபது
கொடியவாணவ மறைக்குளே
பறிவதேதுமற வறிவிலாமைமய
மாயிருக்குமெனையருளினு
ளவிலாதத னுகரணாதிகை
யளித்தபோதனையறிந்துநான்
பிறிவிலாதவண் நின்றிடாதபடி
பலதிலங்கவரு முமலமாய்ப்
பெரியமாயையி லழுந்தினின்னது
பிரசாதநல்லருள் மறந்திடும்

அடவியினின்றுமலை யருகினின்றுசரு
காதிதின்று பனிவெயிலினால்
மெய்வருந்துதவ மில்லைநற்சரியை
கிரியையோகமெனு மூன்றநாய்
மேவுகின்றசவுபான நன்னெறி
விரும்பவில்லை யுலகத்திலே
பொய்முடங்குதொழில் யாகதற்குநல
சாரதித்தொழி னடத்திடும்
புத்தியூகமரி வற்றமூகமிவை
பொருளெனக்கருது மருளன்யான்
தெய்வநல்லருள்படைத்த வன்பரொடு
சேரவுங்கருணை கூர்வையோ
தெரிலகற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே.

ஏகமானவுரு வானவியருளி
னலனேகவுரு வாகியே
எந்தநாளகில கோடிசிரஷ்டிசெய்ய
விசையுநாள் வரையநான்முக
லாகநாளனு வனைக்குமனடிமை
கூடவேசனன மனமோகா
அநந்தமுண்டுகல சன்னமீதிதனு
னறியவேண்டுவன வறியலாம்

மோகமாதிரு பாசமானதை
யறுத்துவிட்டுனையு மெனையுமே
முழுதுணர்ந்துபய மானவின்பவெள
மூழ்கவேண்டு மிதுவின்றியே
தேகமோகமுநினானு மோகமுவின்
பின்னையுய்யும வகையுள்ளதோ
தெரிவதற்கரிய பிரம்மமேயமல
சிற்சுகோ தயவிலாசமே. ௫

லியமலக்ஷணமு மியமலக்ஷணமு
மாசனாதி விதபேதமும்
கெடிமுணர்த்திதய பத்மபீடமிசை
நின்றிலங்கு மசபாநலத்
திடவறிந்தவர் மூலகுண்டலினைய
யினிதிறைஞ்சி யவளருளினால்
எல்லைபற்றுவளர் சோதிமூலவன
லெங்கணமோன் மறுமுறையிலே
வயமிருந்துவரு மமிர்தமண்டல
மதிக்குளே மதியைவைத்துநான்
வாய்மடுத்தமிர்த வாரிசைப்பருகி
மன்னுமாமிர்த வடிவமாய்ச்
செயமிருந்துவரு சித்தயோகநிலை
பெற்றுஞான நெறியடைவனே

தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதய விலாசமே. ௬

எறிதிரைக்கட னிகர்த்தசௌவமிக
வல்லென் றுருநுவர்பின்செலா
தில்லையென் னுமுரை பேசிடாதுலகி
லெவருமாமெனை மதிக்கவே
நெறியின்வைகிவளர் செல்வமும்முதவி
நோய்களற்ற சுகவாழ்க்கையாய்
நியமமாதிநிலை நின்றுஞானநெறி
நிஷ்டைகூடவுமெந்நாளுமே
அறிவினின்றுகுரு வாயுணர்க்கியது
வனறிமோன குருவாகியே
அகிலமீதுவர வந்தசீரருளை
யையவையவினி யென்சொல்கேன்
சிறியனேனைநம தடிமையென்றுனது
திருவுளத்தினி லிருந்ததோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதய விலாசமே. ௭

எவ்வுயிர்த்திரளு முலகிலென்னுயி
ரெனக்குழைந்துருகிநன்மையா
யிதமுரைப்பவென தெண்ணயாவையு
மெடுத்தெறிந்து மதயானைபோல்

கல்லையறநட பயிலவன்பாடி
கண்டதேவருளின் வடிவமாக
கண்டயாவையு மகண்டமென்னவிரு
கைகுவித்து மலர்தூவியே
பவ்வவெண்டிரை கொழித்தண்டரளம்
விழியுதிர்ப்ப மொழிகுளறியே
பாடியாடியுருகிடைந்தெழுது
பாவைபோத்தசைக லின்றியே
திவ்யவன்புருவ மாகியன்பரொடு
மின்பவீட் டினிலிருப்பனே
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதய விலாசமே. அ

மத்தர்பேயரொடு பாலர்தன்மையது
மருவியேதுரிய வடிவமாய்
மன்னுதேசமொடு காலமாதியை
மறந்துநின்னடிய ரடியிலே
பத்தியாய்நெடிது நம்புமென்னையாரு
மையமற தகிலமாமையைப்
பாருபரோன் நடத்தவந்ததென
பாரதத்திலுமி துள்ளதோ
சுத்தநித்தவியல் பாகுமோவுனது
விசுவமாயை நடு வாகவே

சொல்லவேணும்வகை நல்லகாதிகளைத்
சொல்லுமாயையினு மில்லையென
சித்தமிப்படி மயங்குமோவருளை
நமபினோர்கள் பெறுபேறிதோ
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதய விலாசமே. ௯

யன்முகச்சமய நெறிபடைத்தவரும்
யாங்களேசுடவு ளென்றிடும்
பாதகத்தவரும் வாதகர்க்கமிடு
படிறருந்தலை வணங்கிடத்
தனமுகத்தினுயிர் வாவழைக்குமெம
தருமனும்பகடு மேய்க்கியாய்த்
தனியிருப்பவட நீழலூடுவளர்
சனகனாதிமுனிவோரகடம்
சொன்மயக்கழுது தீர வங்கைகொடு
மோனஞானம் துணர்த்தியே
சுத்தநித்தவரு ளிறல்பதாகவுள
சோமசேகர கிர்பாணுவாய்த்
தென்முகத்தினமுத மாயிருந்தகொலு
வெம்முகத்தினும் வணங்குவேன்
தெரிவதற்கரிய பிரமமேயமல
சிற்சுகோதயவிலாசமே. ௰

## ஆகாரபுவனம் சிதம்பரரகசியம்.

ஆகாரபுவன மின்பாகாரமாக
வங்காகலையொருமொழிபாலகண்டாகார
யோகநுபூதிபெற்ற வன்பாவிக்
குருத்தலையே யென்னளவுமுகந்தநட்பே
வாகாரும்படிக்கிசை கிண்கிணிவாயென்ன
மலர்ந்தமலரிடைவாசம் மெங்குமாபோல்
தேசாதியுலகமெங்குங் கலந்துதானே
திகழுமாநந்தமயத் தெய்வக்குன்றே ௧

அனந்தபதவுயிர்களொடு முயிராயென்று
மனந்தநிலையாகி யளவைக்கெட்டாத்
தனந்தனிச்சின்மாத்திரமாய்க் கீழ்மேல்காட்டாச்
சதசத்தாயருள்கோவில் தழைத்ததேவே
இனம்பிரிந்தமான்போறு னிடையாதவன்னை
மின்பமுறவன்பர்பக்க லிருத்திவைத்துக்
கனந்தருமாகனமேதன் னருள்தந்தனே
கனிபழுத்தவானந்தக் கட்டிப்பேறே. ௨

பேறனைத்துமணுவெனவே யுதவித்தன்னைப்
பேரின்பமாகவந்த பெருக்கேபேசா
விரனைத்துமிக்கெறிக்கே யென்னவென்னை
யேவென்றவீரத்தேபூர்ந் வெய்யமாயைக்

கூறனைத்துங்கடந்தவெல்லைச் சேடமாகிக்
குறைவறநின்றிடுநிறைவே குலவாநின்ற
வாறனைத்தும்புகுங்கடல்போற் சமயகோடி
யத்தனையுந்தொடர்ந்துபுகு மாநிட்டே

ஆதியந்தமெனுமெழுவா யீறற்றோங்கி
யருமறையின்முகங்காணாத்தாற்றநாணா
பேதமதங்களுமலைய மலைபோல்வாதப்
பெற்றிபரும் வாய்வாதப்பேயராகச்
சாதகமோனத்திலென்ன வாடவானீழல
தன்னருட்சந்திரமௌலி கடகவைக்கேற்க
வேதசின்னமாத்திரமா யெம்மானோர்க்கும்
வெளியாகவந்தவொன்றே விமலவாழ்வே

விமலமுதற்குணமாகி நாற்றெட்டாதி
வேதமெடுத்தெடுத்துரைத்த விருத்திக்கேற்க
வும்மையுமிலக்கணவடிவா யதுவும்போதா
தப்பாலுக்கப்பாலா யருட்கண்ணாகிச்
சம்முமுடன்கலப்புமவிழ் தலுமாயனுங்காணத்
தண்ணருடன்றெமைக்காக்குஞ்சாக்ஷிப்பேறே
இமையளவுமுபகார மல்லார்வேறொன்
றியக்கிர்பிரக்குணக்கடலா யிருந்தவொன்றே

ஒன்றாகிப்பலவாகிப் பலவர்க்கண்ட
வொளிவாகிவெளியாகி யுருவுமாகி

என்றுசித்திரகி மற்றுமாகி
நாசமுடனுற்பத்தி நன்றுதாகி
நின்றுநிராலயமாய் மேதுமான
வெற்றைதயேபெம்மானே யென்றென்றேங்கிக்
கன்றுகிக்கதரிணர்க்குச் சேதாவாகிக்
கடிதினில்வந்தருள்கூறுங் கருணைவிண்ணே. ௬

அருள்பழுத்தபழச்சுவையே கரும்பேதேனே
யாருயிர்க்கேயென் கண்ணே யரியவான
பொருளனைத்துந்தரும்பொருளே கருணைநீங்காப்
பூரணமாய்நின்றவொன்றே புனிதவாழ்வே
கருதரியகருத்தினுட் கருத்தாய்மேவிக்
காலமுந்தோசமும்வகுத்துக் கருவியாதி
விரிவினையுங்கூட்டியுயிர்த் திரளையாட்டும் [ளே
விழுப்பொருளே யான்சொல்லும் விண்ணப்பங்கே

விண்ணவரிந்திரன்முதலோர் நாரதாதி
விளங்குசப்தரிஷிகள்சன வினைவல்லோர்
எண்ணரியசித்தர்மனு வாதிவேந்த
ரிருக்காதிமறைமுனிவ ரெல்லாதிக்க
கண்ணாகன்றாலம்பதிக்கத் தானேயுள்ளங்
கையினெல்லிக்கனிபோலக் காட்சியாகத்
திண்ணியநல்லறிவாலிச் சயந்தன்றே
செப்பியசித்தமுத்தி சேர்ந்தாரென்றும். ௮

செப்பரியசமயநெறி யெல்லாந்தந்தந்
தெய்வமேதெய்வமெனுஞ் செயற்கையான
அப்பரிசாளருமஃதே பிடித்தாலிப்பா
லடுத்தவந்நூல்களும்விரித்தே யனுமானாதி
ஒப்பவிரித்துரைப்பரிங்கே பொய்மெய்யென்ன
வொண்டிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வாதார்
[க்கு
இப்பரிசாஞ்சமயமுமா யல்லவாகி
யாதுசமயமும்வணங்கு மியல்பதாகி. கூ

இயல்பென்றுந்திரியாம லியமமாதி
யெண்குணமுங் காட்டியன்பாலின்பமாகிப்
பயனருளப்பொருள்கள்பரி வாரமாகிப்
பண்புறவுஞ்சௌபான பக்ஷங்காட்டி
மயலறுமந்திரஞ்சிக்ஷை சோதிடாதி
மற்றங்கநூல்வணங்க மௌனமௌலி
அயர்வறச்சென்னியில்வைத்து ராஜாங்கத்தி
லமர்ந்ததுவைதிகசைவ மழகிதந்தோ. க௦

அந்தோவீததிசயமிச் சமயம்போலின்
மறிஞரெல்லா நடுவறியவணிமாவாதி
வந்தாடித்திரிபவர்க்கும் பேசாமோனம்
வைத்திருந்தமாதவர்க்கு மற்றுமற்றும்
இந்த்ராதிபோகநலம் பெற்றபேர்க்கு
மிதுவென்றித்தாயகம்வே றில்லையில்லை

சந்தானக்கற்பகம்போ லருளைக்காட்டத்
தக்கநெறியிந்நெறியே தான்சன்மார்க்கம். ௧௧

சன்மார்க்கஞானமதின் பொருளும்வீறு
சமயசங்கேதப்பொருளுந் தானென்றாகப்
சன்மார்க்கநெறியிலுங் கண்டதில்லை
பகர்வரியதில்லைமகன் றட்பார்த்தபோதந்
தென்மார்க்கிருக்குமிதெல்லாம் வெளியேயென்ன
வெச்சமயத்தேவர்களும்வந் திறைஞ்சாநிற்பர்
சன்மார்க்கநெஞ்சமுள்ள வெனக்குந்தானே
கண்டவுடனானந்தங் காண்டலாகும். ௧௨

காண்டல்பெறப்புயத்தினுள்ளே படியேயுள்ளுங்
காட்சிமெய்ந்நூல்சொலும் பதியாங்கடவுளேநீ
நீண்டநெடுமையுமகலக் குறுக்குங்காட்டா
நிறைபரிபூரணவடிவாய் நித்தமாகி
வேண்டுவிருப்பொடுவெறுப்புச் சமீபந்தூரம்
வில்லனுருதன்முதலாம் விவகாரங்கள்
பூண்டவளவைகண்மனவாக் காதியெல்லாம்
பொருந்தாமலகம்புறமும் புணர்க்கையாகி ௧௩

ஆகியசற்காரியவூ கத்துக்கேற்ற
வமலமாய்நடுவாகி யனந்தசத்தி
யோகமுறுமானந்த மயமதாகி
யுயிர்க்குயிராயென்று மோங்காநிற்ப

மோகவிருண் மாயவினை யுயிர்கட்கெல்லா
 மொய்த்ததென்கொ லுபகாரமுயர்ச்சியாகப்
பாகமிகருளவொருசத்திவந்து
 பதிந்ததென்சொனுனுமப் பான்மையென்கொல்
நானென்றுவோரகந்தை யெவர்க்கும்வந்து
 நலிந்தவுடன்சகமாயை நானாவாகித்
தான்வந்துதொடருமித்தால் வளருந்துன்பச்
 சாகரத்தின்பெருமையெவர் சாற்றவல்லார்
றானென்றுமுடலென்றுங் கரணமென்று
 முள்ளென்றும்புரமென்று மொழியநின்ற
வானென்னங்காலென்றுந் தீநீரென்று
 மண்ணென்றும்மலையென்றும் வனமதென்றும்.

மலைபூமியாங்காட்சிபண் காணுமையாதி
 மறப்பென்றுநினைப்பென்று மாயாவாரி
யலையலையாயடிக்குமின்பத் துன்பமென்று.
 மதைவிளக்கும்வினைகளென்று மதனைத்தீர்க்கத்
தலைபலவாஞ்சமயமென்றுந் தர்க்கமென்றுஞ்
 சாதகமென்றும்மதற்குச் சாக்ஷியாகக்
கலைபலவாநெறியென்றுந் தர்க்கமென்றுங்
 கடலுறுநுண்மணலெண்ணிக் காணும்போதும்
காணறியவல்லலெல்லாந் தானேகட்டுக்
 கட்டாமவிளையுமதைக் கட்டோடேதான்

வினிற்கற்பூரமாலை படுதீபட்ட
வித்தையெனக் காண்வெரருவிவேகங்காட்ட
ஆனுறக்கமின்பதுன்பம் பேருராதி
யொவ்விடருமெனைப்போல வுருவங்காட்டிக்
கோணறவோஞான்காட்டி மானையீர்க்குங்
கொள்கையேவருண்மௌன குருவாய்வந்து

வந்தெனுடல்பொருளாவி மூன்றுந்தன்கை
வசமெனவேயத்துவா மார்க்கநோக்கி
யைந்துபுலனும்பூதங் கரணமாதி
யடுத்தகுணமத்தனையு மல்லையல்லை
யிந்தவுடல்வறியாமையுநீயல்லை
யாதொன்றுபற்றினத னியல்பாய்நின்று
பந்தமறும்பளிங்கனைய சித்திநீயுன்
பக்குவங்கண்டறிவிக்கும் பான்மையேயாம்.

அறிவாகியானந்த மயமாயென்று
மழியாதநிலையாகி யாதின்பாலும்
பிரியாமற்றண்ணருளே கோயிலான
பெரியபரம்பதியதனைப் பெறவேவேண்டி
னெறியாக்கூறுவன்கே ளெந்நாளும்
நிற்குணநிற்குணம்வாய்த்து நீடுவாழ்க
செறிவானவறியாமை யெல்லாநீக்க
சிற்சுகம்பெற்றிடுகபந்தந் தீர்க்கவென்றே. ௧௧

பந்தமறுமெய்ஞ்ஞான ஞானமோனப்
பண்பொன்றையருளியந்தப் பண்பங்கேதான்
சிந்தையில்லானென்னும் பான்மையில்லை
தேசமில்லைகாலமில்லை திக்குமில்லை
தொந்தமில்லைக்கட்டில்லை பிரிவுமில்லை
சொல்லுமில்லையிராப்பகலாந் தோற்றமில்லை
அந்தமில்லையாதியில்லை நடுவுமில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்துமில்லை.

இல்லையில்லையென்னினொன்று மில்லாதல்ல
வியல்பாகியென்றுமுள்ள வியற்கையாகிச்
சொல்லரியதன்மையதா யான்றானென்னத்
தோன்றுமெல்லாம்விழுங்குஞ் சொரூபமாகி
யல்லும்பகல்போலவ் வித்தையெல்லா
மடையவுண்டுதடையறவுன் னறிவைத்தானே
வெல்வுண்டிங்குன்னையுந்தா னாகக்கொண்டு
வேவகமாய்ப்பேசாமை விளக்குந்தானே. [௨௧

தானான தன்மயமே யல்லாலொன்றைத்
தலையெடுக்கவொட்டாது தலைப்பட்டாங்கே
போனாலுங்கற்பூர தீபம்போலப்
போயொளிப்பதல்லாது பலம்வேறின்றாம்
ஞானகாரத்தினோடு ஞேயமற்ற
ஞாதுருவாழுவாம் னழுவிநிற்கும்

ஆறுதிமிதன்பெருமை யவர்க்கார்சொல்வா
ரதுவாறலதுவாவர்துவேவசொல்லும் ௨௨
அதுவென்றுமெலதுவென்றென்றடுக்குஞ்சங்கை
யாதனிறலதுவெனலு மறவேவிட்டு
மதுவுண்டவண்டெனவுஞ் சனகனாதி [ம்
மன்னர்கள்சுகர்முதலோர் வாழ்ந்தாரென்று
பதியிந்நிலையெனவு மென்னையாண்ட
படிக்குநிருவிகற்பத்தாற் பரமானந்தக்
கதிகண்டுகொள்ளுவநின் னருள்கூரிந்தக்
கதியன்றிபுறங்கண்மேற் கருமம்பாரேன் ௨௩
பாராதிவிண்ணனைத்து நினையாச்சிந்தை
பரியமடலாலெழுதிப் பார்த்துப்பார்த்து
வாராயோவென்பிராண நாதாவென்பேன்
வளைத்துவளைத்தெனைநீயா ணைத்துக்கொண்டு
பூராயமாமேலொன் றறியாவண்ணம்
புண்ணுளர்போனெஞ்சம் புலம்பியுள்ளே
நீராளமாயுருகிக் கண்ணீர்சோர
நெட்டுயிர்த்துமெய்மறந்தோர்நிலையாய்நிற்பேன்
ஆயுமறிவாகியுன்னைப் பிரியாவண்ண
மணைந்துசுகம் பெற்றவன்பரையோவென்னத்
தீயகொலைச்சமயத்துஞ் செல்லச்சிந்தை [வான்
தெளிந்திடவுஞ் சமந்தானஞ்செய்வேன் வாழ்

காயிலைபுன் சருகாதி யருந்தக்கானங்
கடன்மலையெங்கேயெனவுங் கவலையாவேன்
வாயிலகும்பம்போற்கிடந்து புரள்வேன்வானின்
மதிகதிரைமுன்னிலையா வைத்துநேரே.
நேரேதானிரவுபகல் கோடாவண்ணம்
நித்தம்வாவுங்களைபிங் நிலைக்கேவைத்தா
ராரேயங்கவர்பெருமை யென்னேயென்பே
னடிக்கின்றகாற்றேநீ யாராலேதான்
போராதேசுழல்கின்று யென்பேன்வந்து
பெய்கின்றமுகில் காளெம்பெருமானும்போல்
தாராளமாக்கருணை பொழியச்செய்யுஞ்
சாதகமென்னேகருதிச் சாற்றுமென்பேன். ௨௭

கருதரியவிண்ணேநீ யெங்குமாகிக்
கலந்தனையேயுன்முடிவின காட்சியாக
வருபொருளெப்படியிருக்குஞ் சொல்லாயென்பேன்
மண்ணேயுன்முடிவிலெது வயங்குமாங்கே
துரியவறிவுடைச்சேட னீற்றினுண்மை
சொல்லானோசொல்லென்பேன் சுருதியேநீ
ஒருவரைப்போலனைவருக்கு முண்மையாமுன்
னுரைய்ன்றேவுன்முடிதையுரைநீயென்பேன்
உரையிறந்து பெருமைபெற்றுத் திரக்கைநீட்டி
யொலிக்கின்றகடலேயிவ் வுலகஞ்சூழ்க்

கரையுமின்றியுன்னைவைத்தார் யாரேயென்பேன்
கனகத்திற்பைங்கிளிகாள் கமலமோவும்
வரிசிறைவண்டினங்காளோ திமங்காடோது
மார்க்கமன்றேநீங்களிது வரையிலேயும்
பெரியபரிபூரணமாய் பொருளைக்கண்டு
பேசியதுண்டோவொருகாற் பேசுமென்பேன்.

ஒருவனவன்யானைக்கெட குட்த்துட்செங்கை
யோட்டுதல்போலுன்பேதை யுப்போடப்பை
மருவவிட்டுங்கர்ப்பூர மதனிற்றீபம்
மயங்கவிட்டுமைக்கியமுன்னி வருந்திநிற்பேன்
அருளுடையபரமென்றே வன்றுதானே
யானுளனென்றும்முனக்கே யாணவாதி
பெருவினைக்கெட்டென்றுமென்னுகட்டிப்
பேசியதன்றேயருநூல் பேசிற்றன்றே. ௨௯

அன்றுமுதலின்றைவரச்சன்னகோடி
யடைந்தடைந்திங் கியாதனையாலழிந்ததல்லா
லின்றைவரமுத்தியின்றே யெடுத்ததேக
மொப்போதேதெரியாதே யிப்போதேநான்
துன்றுமனக்கவலைகெடப் புலைநாயேனைத்
தொழும்புகொளச்சீகாழித் துரையேதூது
சென்றிடவேபொருளைவைத்த நாவலோய்நஞ்
சிவனீப்பாவென்றவருட் செல்வத்தேவே. ௩0

தேவர்தொழும்வாதவூர்த் தேவேயென்பேன்
　　திருமூலத்தேவேயிச் செகத்தோர்முத்திக்
காவலுறச் சிவ்வெண்வாக்குடனே வந்த
　　வரசேசும்மாவிருந்துன் னருளைச்சாரப்
பூவுலகில்வளராருண கிரியேமற்றைப்
　　புண்ணியர்களாவென்பேன்புரையொன்றில்லா
ஓவியம்போலசைவறவுந் தானேநிற்ப
　　ஞேதரியதர்கெடவே யுரைக்குமுன்னே. ௯க

ஓதரியசுகர்போலே வேனேனென்ன
　　ஒருவரில்லையோ வெனவு முரைப்பேன்றனே
பேதப்பேதங்கெடவு மொருபேசாமை
　　பிறவாதோவாலடியிற் பெரியமோன
நாதனொருதாமூலகம் பார்க்கவிச்சை
　　நன்னுமேனவென்றென்றே நானுவாகிக்
காதன்மிகுமணியிழைபா ரெனவாடுற்றேன்
　　கருத்தறிந்துபுரப்ப முன்மேற்கடன்முக்காலும்

காலமொடுதேசவர்த்த மானமாகி
　　கலந்துநின்றநிலைவாழிகருணைவாழி
மாலறவுஞ்சைவமுதன் மதங்களாகி
　　மதாதீதமானவருண் மரபுவாழி
சாலமிகுமெளியேனிம் வழக்குப்பேசத்
　　தயவுவைத்துவளர்த்தவருட் டன்மைவாழி
யாலடியிற்பரமகுரு வாழிவாழி
　　யகண்டிதாகாரவரு ளடியார்வாழி ௯௯

## தேன்முகம்.

தேன்முகம்பிலுற்றும் பைந்தாட்செய்ய பங்கயத்தின்மேவு, நான்முகத்தேவேரின்று னுட்டியவகில மாயை, கான்றூ'பற்கொம்பேயென்கோ கானல்ப்புலனேயென்கோ, வான்முசமுளரி யென்கோ மற்றென்கோ விளம்பல்வேண்டும். ௧

வேண்டுவ படைத்தாய் நுந்தைவிதிப்படி புரந்தாணத்தை, காண்டகவழிதான் முக்கட்கடாவுடாணினையவாற்று, லாண்டவனெவனோவென்ன வறிகிலாதகில நீயே, யீண்டியவல்லறிர வெய்யனோர்க் கியப்பு கண்டாய். ௨

கண்டன வெல்லவென்றே கழித்திடு மிருந்திக் கண்ணே, கொண்டது பரமானந்தக் கோதிலா ..த்தியத்தாற், பண்டையிற்படைப்புங்காப்பும் பறந்தனபாடையோடே, தெண்டலைவிழிகைகாலில் விளக்கிடநின்றுன் யாவன், ௩

விளங்கவெண்ணீறு பூசி விரிசடை கங்கைதாங்கித், துளங்குநன் னுதற்கண்டோன்றச்சுழல்வெளி நெடுமூச்சாகக், களங்கமிலுருவந்தானே ககனமாய்ப் பொலிவப் பூமி, வளர்ந்தாவளன்னவுள்ள ம்ன்றென் மனையொன்றின்றி, ௪

பறைமுழக்கொளிப்பத்தனே வரமோட் பயக்கைகள், முறைமையினேங்கநாத முறசெனக்கறங்கவெங்குங்குறைவிலாவென நிறைந்து கோதிலாநடன்ஞ்செ

ய்வான், இறையவனெனலாமியார்க்குமிதய சம்மதமீ தல்லால். ௫

அல்லலாந்தொழில்படைத்தே யடிக்கடி யுருவெடுத்தே, மல்லன் மாஞாலங்காக்கவருபவாகயவுளென்னிற்றொல்லையாயு பிறவிவேலை தொலைந்திடா திருநீங்காது நல்லதுமாயைதானு நானெனவந்துநிற்கும். ௬

நானெனநிற்கு ஞான ஞானமன் றந்தஞானம், மோனமா யிருக்கவொட்டா மோனமின்றாக வேதான், தேனெனருசிக்குமண்பாற் சிந்தைநைந்து ருகும்வண்ணம் வானெனநிறைந்தானந்த மாகடல்வளவதின்றே. ௭

இன்றெனவிருப்போமென்னினென்றுஞ்சூனியமாமுத்தி, நன்றெடுதீதுமன்றி நாமுன்னே பெறும்வித்தை, நின்ற பெறநானேநிரந்தா முத்தியென்னின், ஒன்றொருவனைநான் கேட்கவுணாவிலை குருவுமில்லை.

இல்லையென்றிடினிப்பூமி யிருந்தவாறிருப்போமென்னில், நல்லவன் சாருவாக ஞன் சொலு நெறிக்குவீணிற், தொல்லையேனுகமாதி தொடுப்பதேன் மயக்கமேதின், கொல்லை வந்திருமினென்ன வுறவு செய்திடுவனந்தோ, ௯

அந்தணர் நால்வர்கான வருட் குருவாகிவந்த, எந்தையே ரெஞ்லாந்தானென் றியம்பின னெனைப்படைத்த, தந்தைநீயெம்மைகாக்குந் தலைவனே நுந்தையன்ன்று, பந்தமில்சித்திமுத்தி படைக்க நின்னருள் பாலிப்பாய். ௰

## பன்மாலை

பன்மாலைத் திரளிருக்கத் தமையுணர்ந்தோர்
பாமாலைக்கே நீதான் பட்சமென்று
நன்மாலையாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானுஞ்சொன்னேன்
சொன்மாலைமாலையாகக் கண்ணீர் சோரத்
தொண்டனேனெந்நாளுந் துதித்து நிற்பே
னென்மாலையறிந்திங்கே வாவாவென்றே
யெனைக்கலப்பாய் திருக்கருணையெம்பிரானே. ௧

கருணைமொழிசிறிதில்லை னீதலில்லேன்
கண்ணீர்கம்பலையென் கருத்துக்கேற்ற
ஒருபொழுதும்பெற்றறியே னென்னையாளு
மொருவாவுன்னடிமைநா னொருத்தனுக்கோ
விருவினையும்முக்குணமுங் காணநான்கு
மிடர்செயுமைம்புலனுங் காமாதியாரும்
வரவாவுமேழைக்கோ ரெட்டதான
மதத்தொடும்வந்தெதிர்த்த நல்வடிவமன்றே, ௨

வடிவனைத்துந்தந்தவடி வில்லாச்சுத்த
வான்பொருளேயெளியனேன் மனமாமாயைக்
குடிகெடுக்கத்துசங்கட்டிக் கொண்டமோன
குருவேயென்றெய்வமே கோதிலாத
படியெனக்கானந்தவெள்ளம் வந்துதேக்கும்
படியெனக்குன் றிருக்கருணைபற்றும்பாறே.

யடியெடுத்தெமுடியிலின்னம் வைக்கவேண்டு
மடிமுடியொன்றில்லாத வகண்டவாழ்வே. ௯

வாழ்வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன்றேர்ந்த
வாறேந னப்பாலோர் வழிபாராமற்
றாழ்வுபெற்றிங்கிருந்தே னீதென்னீமாயந்
தடையுற்றான்மேற்கதியுந்தடையதாமே
ஊழ்வலியோவல்லதுன்றன் றிருக்கூத்தோவிங்
கொருதமியேன் மேற்குறையோவுணர்த்தாயின்
பாழவதிப்படவெனக்கு முடியாதெல்லாம்
படைத்தளித்து துடைக்கவல்லபரிசினனே ௰.

நானானிங்கெனுமகந்தை யெனக்கேன்வைத்தாய்
நல்வினைதீவினை யெனவேநடுவேநாட்டி
நூன்றுமுடற்சுமையென் மீதேவைத்தா
யுயிரெனவுமென்னையென்று யுள்ளேன்வைத்தா
யாணைமயாயகில நிகிலபேத
மனத்தினுள்ளுந் தானாகி யறிவானந்த
தேனாகிப்பாலாகிக் மனியாய்க்கன்னற்
செழும்பாகாய்க்கற்கற்கண்டாய்த்திகழ்ந்தவொளி
யூன்றியொன்றி நின்று மென்னேயென்னே
யுன்னும்பொருளலை நீயுன்பாலன்பா
னின்றதன்மைக் கிரங்குவை ராக்யனல்லே
னிவர்த்தியையவேண்டுமிந்த நீலனுக்கே

என்றுமென்றுமிந்நெறியோர் குணமுமில்லை
யிழுக்குவார்கைப்பிள்ளை யேதோவேதோ
கன்றுமனத் துடனாடு தழைக்கின்றார்போற்
கல்வியுங்கேள்வியுமாகிக் கலக்குற்றேனே. ௪

உற்றதுணைநீநல்லாற் பற்றுவேறொன்
றுன்னேன்பன் னூலகத் தோடியாடிக்
கற்றதுங்கேட்டதுமித் தனுக்கேதுவாகுங்
கற்பதுங்கேட்டதும்மையுங்காணுநீதா ௫

நற்றுணையேயருட்டாயே யின்பமான
நாதாந்தபரம்பொருளே நாரணாதி
சுற்றமுமாய்நல்லன்பர் தமைச்சேயாகத் [றே
தொழும்புகொள்ளுங் கனகனமேசோதிக்குன் ௬

குன்றாவுருவுருவா யருவாய்ஞானக்
கொழுந்தாகியறுசமயக் கூத்துமாடி
நின்றாயேமாயையெனுந் திரையைநீக்கி
நின்னையாறியவல்லார் நினைப்போர்நெஞ்ச ௭

மன்றுளின்பக்கூத்தாடவல்ல
மணியேயென் கண்ணேமாமருந்தேநால்வர்க்
கன்றாலின்கீழிருந்து மோனஞான
மைந்தசின்முத் திரைக்கடலேமாரேறே ௮
திரையில்லாக்கடல்போலச் சலனந்தீர்ந்து [லாம்
தெளிந்திருக்கும்பொன்போலச் செகத்தையெல்

கரையவேகனிந்துருக்கு முகத்திலே நீ
கனிந்தபரமானந்தக் கட்டியிந்நாள்
வரையிலேவாக்காணே னென்றற்கட்டி
வார்த்தைசொன்னாற் சுகம்வருமோ வஞ்சனேனை
இரையிலேயிருத்திநிரு விகற்பமான-
வின்பநிஷ்டைகொடுப்பதையா வெந்நாளோ. ௰

எந்தநாளுனக்கடிமை யாகுநாளோ
வெந்நாளோ கதிவருநா ளெளியனென்றன்
சிந்தைநாள துவரைக்கு மயங்கிற்றல்லால் [சொல்
தெளிந்ததுண்டோ வெளியாய்த்தெளியவோர் ௧௧

சந்தநான்முதலின்பக் கால்சற்றல்லால்
தடையறவானந்தவெள்ளந் தானேபொங்கி
வந்நாளில்லைமெத்த வலைந்தேனுன்னை
மறவாவின்பத்தாலே வாழ்கின்றேனே. ௧௨

---

## நினைவொன்று.

### ஞானிகளிடம் பொருளேவல்.

நினைவொன்றுநினையாம னிற்கினைகமென்பீர்
நிற்குமிடமேமருளா நிஷ்டையருளொட்டும்
நினைவென்றுமறந்திருப்ப வருள்வடிவானதுமேல்
தட்டியெழுந்திருக்குமின்பந்தன்மயமாயதுவாம்

நினைவொன்றுமிலையந்த நினைவுமெனுநிலையும்
னெற்றேபிறவாமை பெற்றார்பற்றற்றான்
பனைவொன்றுமகவென்றுஞ் சுற்றமென்றுஞ்சுத்த [கேட
வாதனைபாமனைசெயொழிமன்னெருகொண்

ஒருமொழியேபல்மொழிக்கு மிடங்கொடுக்குமந்த
வொருமொழியே மலமொழிக்குமொழிக்குமென
மொழிந்த
தருமொழியேமலையிலக்கு மற்றமொழியெல்லாம் [ய்
கோடின்றிவட்டாடல் கொள்வதெரக்குங்கண்டா
வருமொழியிங்குனக்கில்லை மொழிக்குமொழிருசிக்கக்
கரும்பனையசொற்குணக் காட்டவிங்கண்டனை
தருமொழியிங்குனக்கில்லை யுன்னைவிட்டுநீங்காத[மேய்
தற்பரமாயனந்தப் பொற்பதவாய்நில்லே

இல்லாதவாக்கைநிலை யன்றெனவேகண்டாய்
நேயவருண்மெய்யன்றே நிலையமதாகிற்கக்
கல்லாதேயென்படித்தாய் கற்றதெல்லாமூடம்
கற்றதெல்லாமூடமென்றே கண்டனையுமன்று
சொல்லாதேபயனில்லை சொன்முடிவைக்காணே
தொடங்குபிடிமற்கட்டம் போற்றெட்டுப்பற்றதில்
கல்லாமறிந்திடவே வாய்ப்பறைகொண்டடிநீ
பிராப்தகலில்லா வீடமே யெமக்கிடமென்றறிந்தே

இடம்பொருளேவலைக்குறித்து மடப்புகுதாயெனவே
யெங்கேநீயகப்பட்டா யிங்கேநீவாடா

அடிமுடியுநடுவுமற்ற பரவெளிமேற்கொண்டா
லத்துவிதவானந்த சித்தமுண்டாநமது
குடிமுழுதும்பிழைக்குமொரு குறையுமில்லையெடுத்த
கோலமெல்லாநன்றாகுங் குறைவுநிறைவாமே
விடியுமுதயம்போலெ வருமுதயம்பெற்ற
வித்தகரோடுங்கூடி விளையாடலாகும்
படிமுழுதும்விண்முழுதுந் தானாகுங்களியாப்
பாலருடனுன்மத்தர் பிசாசர்குணம்வருமே. 	எ

வரும்போமென்னவுமின்றி யென்றுமொருபடித்தாய்
வானதிகத்துவத்தை விளங்கநிறுத்திவெளியா
யிரும்போகல்லோமரமோ வென்றுநெஞ்சைக்கனன்
மேலிட்டமெழுகாவுருக்கு மின்பவெள்ளமாகிச்
கரும்போகற்கண்டோசீனிசர்க்கரையோதேனோ
கனியமிர்தோ வெனருசிக்குங் கருத்தவிழ்ந்தோ கா
[ருணர்வா
ரரும்போநன்மணங்காட்டுங் காமாசங்கண்ணி
யறிவாளோபக்குவர்க்கே வந்நிலந்தான்விளங்கும்

தானேவுமிவ்வுலக மொருமுதலுமாகத்
தன்மையினுற்படைத்தளிக்குந் தலைமையதுவான
கோனுகவொருமுதலின் குண்டெனவும்யூகங்
கூட்டியதுஞ்சகமுடிவிற் குலவுறுமெய்ஞ்ஞான
வானகவம்முதலே நிற்குநிலைநம்பால்
மதிப்பரிதாமெனமோனம் வைத்ததுமுன்மனமே

ஆறுமனஞ்சடமென் றருளுந்தாதேயுண்மை
யறிவித்தவிடங்குருவா மருளிலதொன் றிலையே.

---

## பொன்னைமாதரை.

பொன்னைமாதரைப் பூமியைநாடிடே
னென்னைநாடிய வென்னுயிர்நாதனே
உன்னைநாடுவ னுன்னருட் டூவெளி
தன்னைநாடுவன் தன்னந்தனியனே. ௧

தன்னதென றுரை சாற்றுவனெலா
மின்னதென் றுரை சாற்றுவனெலா
னின்னமென்னை யிடருறக்கூட்டினால்
பின்னையுய்கிலன் பேதையனாவியே ௨

ஆவியேயுனை யானறிவாய்நின்று
சேவியேனைகளச் சிதைத்திறைகொடேன்
பாவியேனுள பாண்மையைக்கண்டுநீ
கூவியாளெனை யாட்கொண்டகோலமே. ௩

கோலமின்றிக்குணமின்றிநின்னருட்
சீலமின்றிச் சிறியன்பிழைப்பனோ
ஆலமுண்டு மமிர் தருவாய்வந்த
காலமெந்தைகதி நிலைகாண்பதே. ௪

காணுங்கண்ணிற் கலந்தகண்ணேயுனைச்
சேனும்பாருந் திரிபவர்காண்பரோ.

வானும்பொன்னு மதுவெனும்பான்மையும்
பூணுங்கோலம் பொருந்தியுணிற்கவே, ௫

நிற்குநன்னிலை நிற்கப்பெற்றாருள்
லர்க்கன்றி மனிதரன்றேவையா
ஞர்க்குணக்கூடற் சோங்கணபாவியேயற்
கெற்குணங்கள் டென்பெயர்சொல்வதே. ௬

சொல்லையுன்னித் துடித்ததலாலரு
ளொல்லையுன்னி யெனையங்குவைத்திலேன்
வல்லைநீயென்னை வாவென்றிடாவிடின்
சல்லையாமிக் கருமிநடக்கையே. ௭

கையுமெய்யுங் கருத்துக்கிசையவே
யையந்தந்தற் கையமினியுண்டோ
பொய்யனேன்சிந்தைப் பொய்கெடப்பூரண
மெய்யதாமின்ப மென்றுவிளைவதே. ௮

என்றுமுன்னை யிதயவெளிக்குளே
துன்றவைத்தனனே யருட்சோதிநீ
நின்றதன்மை நிலைக்கென்னநேர்மையாம்
நன்றுநீதற வைத்தநிவதே. ௯

வைத்ததேகம் வருந்தவருந்திடும்
பித்தனருள் பெற்றுந்திடமிலேன்
சித்தமோனசிவ சின்மயானந்தம்
வைத்தவைய வருட்செம்பொற்சோதியே. ௰

செம்பொன்மேனிச் செழுஞ்சுடரேமுழு
வம்பனேனுனை வாழ்த்துமதியின்றி
இம்பர்வாழ்வினுக் கிச்சைவைத்தேன்மனம்
நம்புவாவெளி ஞானென்சொல்செய்வதே. கக

செய்புஞ்செய்கையுஞ் சிந்தைக்குச்சிந்தையு
மையநின்னதென் றெண்ணுமறிவின்றி
வெய்யகாம வெகுளிமயக்கமாம்
பொய்யிலேகழன் றேனென்னபுன்மையே. கஉ

புன்புலானரம்பென்புடைப்பொய்யுடல்
அன்பர்யார்க்கு மருவருப்பல்லவோ
என்பெலாமணி யேயிறையேயித்தால்
துன்பமன்றிச் சுகமொன் றுமில்லையே. கங

இல்லையுண்டென் றெவர்பக்கமாயினுஞ்
சொல்லவோவறி யாததொழும்பன்யான்
செல்லவேறொரு திக்கறியேனெலாம்
வல்லநீயெனை வாழ்விக்கவேண்டுமே. கச

வேண்டுஞ்சீருண் மெய்யன்பர்க்கேயன்பு
பூண்டநானெனை புலமறியாததோ
ஆண்டநீயுன் னடியவனென்று
தூண்டுவேனன்றித் தொண்டனென்சொல்வதே.

என்க்குளேயுயிரென்ன விருந்தநீ
மனக்கிலேசத்தை மாற்றல்வழக்கன்றோ

கனத்தசீருங் காட்சிபலவொன்றை
நினைக்கவோவறி யாதென்றனெஞ்சமே. ௧௬

நெஞ்சகந்தனை நேசித்தமார்க்கண்டர்க்
கஞ்சலென்ற வருளறிந்தேனையா
தஞ்சமென்றுன் சரணடைந்தேனெங்கும்
செஞ்சவேநின்று சிற்சுகவாரியே. ௧௭

வாரியேழு மலையும்பிறவுந்தான்
சீரிநானின் சின்மயத்தேயென்றால்
ஆரிலேயுள தாவித்திரளதை
ஓரிலேனென்னை யாண்டவொருவனே. ௧௮

ஒருவனென்னுளத் துள்குங்குறிப்பறிந்
தருள்வரோவென்னை யாளுடையண்ணலே
மருளனேன்பட்ட வாதைவிரிக்கிறே
பெருகுநாளினிப் பேசவிதியின்றே. ௧௯

இன்றுனக்கன் பிழைத்திலனென்றே
அன்றுதொட்டென்னை யாளரசேயென்று
நின்மாற்றிய நினைக்கைவிட்டால்
மன்றமெப்படி நின்னருள்வாழ்த்துமே. ௨௰

வாழ்த்துநின்னருள் வாரம்வைத்தாலன்றிப்
பாழ்த்தசிந்தைப் பதகனுமுய்வனோ
சூழ்த்துநின்ற தொழும்பரையானந்தத்
தாழ்ந்துமுக்க ணருட்செம்பொற்சோதியே. ௨௧

சோதியேசுட ரேசுகமேதுணை
நீதியேநிசமே நிறைவேநிலை
ஆதியேயுனை யானடைந்தேனகம்
வாதியாதருள் வாயருள்வானமே. ௨௨

வானமேபோல வளர்ந்துகொண்டானந்தத்
தேனைத்தந்தெனைச் சேர்ந்துகலந்தமெய்ஞ்
ஞானத்தெய்வத்தை நாடுவனெந்நாளும்
ஈனப்பாழ்கெட வென்றுமிருப்பனே. ௨௩

இரும்பைக்காந்த மிழுக்கின்றவாறெனத்
திரும்பிப்பார்க்கவொட் டாமற்றிருவடிக்
கரும்பைத்தனதுகண் ணீர்கம்பலையெலா
மரும்பச்செய்யெனதன்னை யொப்பாமனே. ௨௪

அன்னையப்பனென் றாவித்துணையெனுந்
தன்னையொப்பற்ற சற்குருவென்பதென்
என்னைப்பூரண இன்பவெளிக்குளே
துன்னவைத்த சுடரெனத்தக்கதே. ௨௫

தக்கதேகள்வியிற் சார்ந்தநற்பூமியின்
மிக்கதாக விளங்குமதொன்றே
எங்கணுந்தொழ யாவையும்பூத்துக்காய்த்
தொக்கநின்றுமொன்றாய்மறைவானதே; ௨௬

ஆனமான சமயங்களாறுக்கும்
தானமாய்நின்ற தன்மயங்காட்டிய

ஞானபூரண நாதனை நாடியே
தேனெனவின்பந் தேக்கித் திளைப்பனே, ௨௭

தேக்கியின்பந் திளைக்கத் திளைக்கவே
யாக்கையாவெனக் கானந்தமாகியே
போக்கிலே வரவற்றபூரணம்
தாக்கிநின்றவர் தன்மயமாமதே. ௨௮

அதுவென்றன்று மதுவுமறநின்ற
மூதியஞானிகண் மோனப்பொருளது
எதுவென்றெண்ணி யிறைஞ்சவினைமையேன்
மதியுணின்றிடும் வாரிவழங்குமே ௨௯

வாரிக்கொண்டனை வாய்மடுத்தின்பமாய்ப்
பாரிற்கண்டவை யாவும்பருகினே
னோரிற்கண்டிடு மூபன்கனவென
யாருக்குஞ்சொல வாயிலையையனே ௩௰

ஐயமுற்றதிலொருணர்க்கெலாங்
கையிலாமல கக்கனியாகிய
மெய்யனேயிந்த மேதினிமீதுழல்
பொய்யனேற்குப் புகலிடமெங்ஙனே ௩௧

எங்ஙனேயுய்ய யானெனதென்பதற்
றங்ஙனேயுன்னருண் மயமாகிலேன்
திங்கள்பாதி திகழப்பணியணி
சங்குவார்சடைக் கண்ணுதலெந்தையே, ௩௨

கண்ணிற்காண்பதுன் காட்சிகையாற்றொழில்
பண்ணல்பூசை பகர்வதுமந்திரம்
மண்ணொடைந்தும் வழங்குயிர்யாவுமே
அண்ணலேயுன் னருள்வடிவாகுமே. ௩௩

வடிவெலாநின் வடிவெனவாழ்த்திடாக்
கடியனேனுமுன் காரணங்காண்பனோ
நெடியவானென வெங்குநிறைந்தொளிர்
அடிகளேயர சேயருளத்தனே. ௩௪

அத்தனேயகண்ட டானந்தனேயருட்
சுத்தனேயென வுன்னைத்தொடர்ந்திலேன்
மத்தனேன்பெறு மாமலமாயவான்
கத்தனேகல்வி யாக்துகற்கவே. ௩௫

கற்றுமென்பலன் கற்றிடுநான்முறை
சொற்றசொற்கள் சுகாரம்பமோநெறி
நிற்றவேண்டு நிருவிகற்பச்சுகம்
பெற்றபேர்பெற்ற பேசாப்பெருமையே. ௩௬

பெருமைக்கேயிறு மாந்துபிதற்றிய
கருமிக்கையகதியுமுண்டாங்கொலோ
வருமைச்சீரன்பர்க் கன்னையொப்பாகவே
வருமட்பேரொளியே யுன்மனானந்தமே. ௩௭

உன்மனிக்குளொளிர்பரஞ்சோதியாம்
சின்மயப்பொரு ளேபழஞ்செல்வமே

புன்மலத்திப் புழுவன்னபாவியேன்
றன்மனத்தைக் கரைக்கக்கடவதே. ௩௮

கரையிலின்பக் கடலமுதேயிது
வரையினுன்னை வந்துகலந்திலே
னுரையிலாவின்ப முள்ளவர்போலவித்
தரையிலேநடித் தேனென்னதன்மையே. ௩௯

மையுலாம்விழி மாதர்க்கேடோதகப்
பொய்யிலாழும் புலையனிப்பூரைகாண்
கையிலாமல கக்கனிபோன்றவென்
னையனேயென்னை யாளுடையண்ணலே. ௪௰

அண்ணலேயுன் னடியவர்போலருட்
கண்ணினாலுனைக் காணவும்வாவெனப்
பண்ணினாலென்ன பசுத்துவம்போயுய்
வண்ணமேகமுன் னேயபவாய்க்குமே. ௪௧

வாய்க்குந்தைக்கு மௌனமௌனமென்
றேய்க்குஞ்சொற்கொண் டிராப்பகலற்றிடா
நாய்க்குமின்பமுண் டோநல்லடியரைத்
தேய்க்குமானந்தத் தூவெளிவெள்ளமே. ௪௨

தூயதான ஆரியவர்வெறும்
தாயுநீயின்பத் தந்தையுநீயென்றாற்
சேயநாமிந்தச் சீவத்திரளன்றோ
ஆயபேரொளி யானவகண்டமே. ௪௩

அகண்டமென்ன வருமறையாகமம்
புகன்றதின்றன்மை போதத்திடங்குமே
செகங்களெங்குந் திரிந்துநன்மோனத்தை
யுகந்துபெருனை யொன்றுவரையனே. ௬௪

ஐயனையுனை யன்றியொருதெய்வங்
கையினாற்றொழ வுங்கருதேன்கண்டாய்
பொய்யனாகிலும் பொய்யுரையேன்சுத்த
மெய்யனாமுனக் கேவெளியாகுமே. ௬௫

வெளியினின்ற வெளியாய்விளங்கிய
வொளியினின்ற வொளியாமுன்றன்னைநான்
தெளிவுதந்தகல் லாலடித்தேவென்று
களிபொருந்தவென் றோகற்றகல்வியே. ௬௬

கல்லையுற்ற கருத்தினர்கார்பிறந்
தல்லையொத்த குழலினராசையால்
எல்லையற்ற மயல்கொளவோவெழில்
தில்லையிற்றிக ழுந்திருப்பாதனே. ௬௭

திருவருட்டெய்வச் செல்விபங்காக
வருவிருக்கின்ற மேனியொருபாங்
குருவமாக்கனைங் கோவைப்பணிந்தே
கருவிருக்கின்ற கன்மமிங்கில்லையே. ௬௮

கன்மமேது கடுநரகேதுமேற்
சென்மமேதெனைத் தீண்டக்கடவதோ

வென்மனேறாத மெய்ச்சம்படிக்கரு
னொன்மைகூர்மூக் கணுதனிருக்கவே. ௯௯

காதகிதனென்னுதன் முக்கட்பிரான்
வேதவேதியன் வெள்விடையூர்திமெய்ப்
போதயாழ்நின்றபுண்ணியன் பூந்திருப்
பாதமேகதிமற்றிலையாழ்நெஞ்சே. ௱

மற்றுனக்குமயக்மென்வன்னெஞ்சே
கற்றைவார்சடைக்கண்ணுதலோனருள்
பெற்றபேரவரே பெரியவரலா
முற்றுமோர்க்கவர் முதுரையர்த்தமே ௱௧

உரையிறந்துளத்துள்ள விகாரமந்
திரைகடந்தவர் தேடுமுக்கட்பிரான்
பரைநிறைந்த பரப்பெருங்கனை
கரைகடந்தின்ப மாகக்கலப்பதே. ௱௨

கலந்துத்திகருதினுங்கேட்பினு
நிலங்களாகிய நின்றனைப்போலவே
யலந்துபோயின மென்றுமருமுறை
மலர்ந்தவாய்முக்கண் மாணிக்கச்சோதியே. ௱௩

சோதியாதெனைத் தொண்டருட்கூட்டியே
போதியாதவெல் லாமெனப்போதித்த
வாதிகாலத்தி னுன்னடிக்காந்தவ
மேதுநான்முயன் றேன்முக்கணெந்தையே. ௱௪

எந்தநாளைக்கு மின்றருடாயென
வந்தசீரருள் வாழ்கவென்றுளவென்
சிந்தைநோக்கந் தெரிந்துகுறிப்பெலாந்
தந்துகாக்குந் தயாமுக்கணதியே. ருரு

கண்ணகன்றவிக் காசினியூடெங்கும்
பெண்ணொடாண்முத லாவெவ்விறவியை
எண்ணவோவரி தேனைமுகத்தெப்பூரும்
வண்ணமுக்கண் மணிவந்துகாக்குமே. ருசு

காக்குநின்னருட் காட்சியல்லாலொரு
போக்குமில்லையென் புந்திக்கிலேசத்தை
நீக்கியாளுகை நின்பரமன்பினர்
ஆக்கமேமுக்க ணானந்தமூர்த்தியே. ருஎ

ஆனந்தங்கதி யென்னவென்றானந்த
மோனஞ்சொன்ன முறைபெறமுக்கணங்
கோனிங்கிந்தக் குறிப்பதல்லவெறுந்
தீனஞ்செய்கை திருவருட்செய்கையே. ருஅ

கையினாறெழு தேத்திச் சிந்துள
மெய்யினாலுனைக் காணவிரும்பினேன்
ஐயனேயாசே யருளேயருட்
டையலோர்ப்பாக வாழ்சகநாதனே, ருகூ

சகத்தின்வாழ்வைச் சதமெனவெண்ணியே
மிகுத்ததீமை விளையவிளைக்கின்றேன்

னகத்துளர்ஏமு தாமையநின்முத்திச்
சுகத்தினுள்வந்து தோய்வதெக்காலமே. கூ0

காலமென்றுங் கடந்தெளிராகின்
கிலமேநின் றிருவருளாலிந்த்ர
சாலமாமிச் சகமெனவெண்ணிநின்
கோலநாடுதலென்று கொடியனே. கூக

கொடியவெவ்வினைக் கூற்றைத்துரந்திடு
மடிமகளாய்ப்பொரு ளேகினக்கன்பின்றிப்
படியிலேலனைமை பற்றுகின்றேன்வெறு
மிடியனேன்கதி மேவும்விதியின்றே. கூஉ

விதியையும்விதித் தென்னைவிதித்திட்ட
மதியையும்விதித் தம்மதிமாயையில்
பதியவைத்த பசுபதிநின்னருட்
கதியையெப்படிக் கண்டுகளிப்பதே. கூங

கண்டகண்ணுக்குக் காட்டுங்கதியெனப்
பண்டுமின்றுமென பானின்றுணர்த்திடு
அண்டனேயுனக் கோர்பதினாயிரம்
தெண்டனென்பொய்ம்மை தீர்த்திடவேண்டுமே.

வேண்டும்யாவு மிறந்துவெளியிடைத்
தூண்டுவாரற்ற சோதிப்பிரானின்பால்
பூண்டவன்பாதம் பொற்பணிவாய்க்குமே
மீண்டுசன்ம மெடுப்புனனந்தமே. கூரு

எடுத்ததேக மிறக்குமுன்னேயெனைக்
கொடுத்துநினையுங் கூடவுங்காண்பனே
வடுத்தபேரறி வாயறியாமையைக்
கெடுத்தவின்பக் கிளர்மணிக்குன்றமே. சுசு

குன்றிடாத கொழுஞ்சுடரேமணி
மன்றுளாடிய மாணிக்கமேயுனை
அன்றியார்துணை யாருறவார்கதி
என்றுநீயெனக் கின்னருள்செய்வதே. சுஎ

அருளெலாந்திரண் டோர்வடிவாகிய
பொருளெலாம்வல்ல பொற்பொதுநாதவென்
மருளெலாங்கெடுத் தேயுளமன்னலா
லிருளெலாமிருந்தெங் கொளித்திட்டதே. சுஅ

எங்குமெனையிக லுறவாட்டிய
பங்கஞ்செய்த பழவினைபற்றறால்
அங்கணுவன் னடியிணையன்றியே
தங்கவேறிட முண்டோசகத்திலே. சுகூ

உண்டவர்க்கன்றி யுட்பசியோயுமோ
கண்டவர்க்கன்றிக் காதலடங்குமோ
தொண்டருக்கெளி யானென்றுதோன்றுவான்
வண்டமிழ்க்கிசை வாகமதிக்கவே. எ0

மதியுங்கங்கையுங் கொன்றையுமத்தமும்
பொதியுஞ்சென்னிப் புனிதனின்பொன்னடிக்

சதியைவிட்டிந்தக் காமத்திலாழ்ந்தவென்
விதியையெண்ணி விழிதுயிலாதென்றே. எக

அன்றெனச்சொலீ வமெனபற்புதம்
நன்றெனச்சொல நண்ணியநன்மையை
ஒன்றெனச்சொன் னொண்பொருளையொளி
இன்றெனக்கருள் வாயிருளேகவே. எஉ

இருவரேபுகழ் தேத்தற்கினியராம்
ஒருவரேதுணை யென்றுணராய்நெஞ்சே
வருவரேகொடுங் காலர்கள்வந்தெதிர்
பொருவரேயவர்க் கென்சொல்புகல்வதே. எங

புகழுங்கல்வியும் போதமும்பொய்யிலா
வகமும்வாய்மையு மன்புமளித்தவே
சுகவிலாசத் துணைப்பொருடோற்றமாங்
ககனமேனியைக் கண்டனகண்களே. எச

கண்ணுணின்ற வொளியைக்கருத்தினை
விண்ணுணின்று விளங்கியமெய்யினை
எண்ணியெண்ணி யிரவும்பகலுமே
நண்ணுகின்றவர் நான்முழுந்தெய்வமே. எரு

தெய்வம்வேறிலை தென்றவர்சிந்தனை
நைவரென்பது நற்பரதற்பர
சைவசிற்சிவ னேயுனைச்சார்ந்தவர்
உய்வரென்பதும் யானுணர்ந்தேனுற்றே. எசா

உற்றவேளைக்கு குறுதுணையாயிந்தச்
சுற்றமோனமைக் காக்குஞ்சொலாய்நெஞ்சே
கற்றைவார்சடைக் கண்ணுதல்பாதமே
பற்றநாயிற் பரசுகம்பற்றுமே.

பற்றலாம்பொரு ளேபாம்பற்றினால்
உற்றமாதவர்க் குண்மையைநல்குமே
மற்றும்வேறுள மார்க்கமெல்லாமெடுத்
தேற்றுவாய்மன மேகதியெய்தவே

---

## ஆரணம்.

ஆரணமார்க்கத் தாகமவாசி
யற்புதமாய் நடந்தருளும்
காரணமுணர்த்துங் கையுநின்மெய்யும்
கண்கண்மூன்று முடையவென்கண்ணே
பூரணவறிவிற் கண்டிலாதனூற்
போற்றியிப் புகதியோடிருந்து
தாரணியுள்ளமட்டுமே வணங்கத்
தமியனேன் வேண்டிடத்தகுமே.
இடமொருமடலா னுலகனைக்கீந்தி
டெவ்வுலகத்தையு மீன்றும்
தடமுறுமகில மடங்குநாளம்மை
தன்னையுமொழித்து விண்ணெனவே

படருஞ்சோதிக் கருணையங்கடலே
பாயிருட்புடு கரிற்கிடக்கக்
கடனதொங்கிணைப்பு மரப்பெறுந்திரையைக்
கவர்ந்தெனை வளர்ப்பதுன்கடனே. உ

வளம்பொருளான வாரிவாய்மடுத்து
மண்ணையும் விண்ணையுந்தெரியா
தளம்பெருந் துரும்பொத் தாவியோடாக்கை
யானந்தமாகவே யலைந்தேன்
களம்பெறுவஞ்ச நெஞ்சினர்காணாக்
காட்சியேசாட்சியே யறிஞ
ருளம்பெறுந்துணையே பொதுவினடிக்கு
முண்மையேயுள்ளவா றிதுவே. ௩

உள்ளமேநீங்கா லென்னைவாவென்
றுளப்பிலா வானந்தமான
வெள்ளமேபொழியுங் கருணைவான்முகிலே
வெப்பிலாத தண்ணருள்விளக்கே
கள்ளமேதுரக்குந் தூவெளிபரப்பே
கருவெனக்கிடந்த பாழ்மாயப்
பள்ளமேவீழா தெனக்கரையேற்றிப்
பாலிப்பதுன்னருட்பரமே. ௪

பரம்பரமாகிப் பக்குவம்பழுத்த
பழவடியார்க் கருள்பழுத்துச்

சுரந்தினிதிரங்குந் தானகற்பகமே
சோதியேதொண்டனே னின்னை
யிரந்துநெஞ்சுடைந்து கண்டுயில்பெரும
லிருந்ததுமென்கணி ளிருட்டைக்
கரந்துநின்கண்ணுற் றுயில்பெறவேண்டிக்
கருதினேன் கருத்திதுதானே.

கருத்தினுட்கருத்தா யிருந்துநீயுணர்த்துங்
காரணங்கண்டு சும்மாதான்
வருத்தமற்றிருந்து சுகம்பெறுவண்ணம்
வருந்தினேன் மதியின்மைதீர்ப்பா
ரொருத்தராருளப்பா டுணர்பலர்யாவ
ருலகவர்பன் னெறியெனக்குப்
பொருத்தமோசொல்லாய் மௌனசற்குருவே
போற்றிநின் பொன்னடிப்போதே.

அடியெனும்மதுவு மருளெனுமதுவு
மறிந்திடிநிர்க்குண நிறைவு
முடியெனுமதுவும் பொருளெனுமதுவு
மொழிந்திடிற் சுகமனமாயைக்
குடிகெடவேண்டிற் பணியறநிற்றல்
குணமெனப் புன்னகைகாட்டிப்
படிமிசைமௌனி யாகிநீயளப்
பாக்கியமென்செய்தேன் பரனே.

என்செயலின்றி யாவுநின்செயலென்
றெண்ணுவேனெவ் வொருகாலம்
புன்செயன்மாயை மயக்கினேன்செயலாப்
பொருந்துவே னக்தொருகாலம்
பின்செயல்யாது நினைவின்றிகிடப்பேன்
பித்தனே னன்னிலைபெறநின்
றன்செயலாக முடித்திடல்வேண்டுஞ்
சச்சிதானந்த சற்குருவே. ௮
குருவருளாகி மௌனியாய்மௌனக்
கொள்கையை யுணர்த்தினையதனாற்
கருவுருவாவ தெனக்கிலையிந்தக்
காயமோ பொய்யெனக்கண்ட
திருவுருவாள ரனுபவநிலையுஞ்
சேருமோவாவலோமெத்த
வருவுருவாகி யல்லவாய்ச்சமய
மளவிடாவானந்த வடிவே. ௯
வடிவிலாவடிவாய் மனநினைவணுகா
மார்க்கமாய் நீக்கருஞ்சுகமாய்
முடிவிலாவீட்டின் வாழ்க்கைவேண்டினோர்க்குன்
மோனமல்லால் வழியுண்டோ
படியிருளகலச் சின்மயம்பூத்த
பசுங்கொம்பை யடக்கியோர்கல்லா
லடியிலேயிருந்த வானந்தவரசே
யன்பரைப் பருகுமாரமுதே. ௰

## சொல்லற்கரிய

சொல்லற்கரிய பரம்பொருளே சுகவாரிதியேசுடர்க்கொழுந்தே, வெல்லற்கரியமயலிலெனை விட்டங்கொளித்தாயா கெட்டேன், கல்லிற்பசியநாருரித்துக் கடலிற்பெரியகடலடைக்கு, மல்லிற்கரிய வந்தகனார்க் காளாகினையோ வறியேனே. ௧

அறிவிற்கறிவுதாரகமென்றறிந்தேயறிவோடறியாமை, நெறியிற்புகுதாதோர்படிக்காய்நின்றநிலையுந்தெரியாது, குறியற்றகண்டாதீதமயக் கோதிலமுதே யெனைக் குறுகிப், பிறவற்றிருக்க வேண்டாவோ பேயேற்கினி நீபேசாயே. ௨

பேசாவனுபூதியையடியேன் பெற்றுப்பிழைக்கப் பேரருளாற், றேசோமயந்தந் தினியொருகாற் சித்தத்திருளுந் தீர்ப்பாயோ, பாசாடவியைக் கடந்தவன்பர் பற்றுமகண்டப்பரப்பான, ஈசாபொதுவில் நடமாடு மிறைவா குறையாவின்னமுதே. ௩

இன்பக்கடலிற் புகுந்திடுவானிரவும்பகலுந்தோற்றுக, வன்பிற் கரைந்துகரைந்துருகி யெண்ணுவர்சேயெனகூவிப், பின்புற்றழுஞ்சேயென விழிநீர்பெருக்கிப் பெருக்கிப் பித்தாகித், துன்பக்கடல்விட் டகல்வேனோ சொரூபானந்தச் சுடற்கொழுந்தே. ௪

தொழுந்துதிகழ்வெண் பிறைச்சடிலக் கோவேம
ன்றிற்கூத்தாடத், தெழுந்தசுடரேயிமையவரை யென்று
மக்கணுக்கினியானே, தொழுந்தெய்வமுநீகுருவுநீது
ணை நீ தந்தைதாயுநீ, யழுந்தும்பவநீ நன்மையுநீ யாவி
யாக்கைநீதானே. ரு

தானேயகண்டாகாரமயக் தன்னிலெழுந்துபொது
நடஞ்செய், வானேமாயப் பிறப்பறுப்பான் வந்துன்ன
டிக்கே கரங்கூப்பித் தேனேயென்னைப் பருகவல்லதெ
ள்ளாரமுதே சிவலோகக், கோனேயெனுஞ் சொன்னி
னைத்துசெவி கொள்ளாதென்னே கூறாயே. சா

கூறுநின்ற விடக்கவலைக் குடும்பக்கூத்துட் டுளைந்
திதடு, மாறுநின்றபாவியைநீவாவென் றழைத்தாலாக
தோ, நீறார்மேனிமுக்கணுடைநிமலாவடியார்நினைவினி
டை, யாறாய்ப்பெருகும் பெருங்கருணைப்பரமே யென்னை
யாள்வானே. எ

வானே முதலாம் பெரும்பூதம் வகுத்துப்பூர்த்து
மாற்றவல்ல, கோனேயென்னைப் புரக்குநெறிகுறித்தா
யிலையே கொடியேனைத், தானேபடைத்திங் கென்னப
லன்றன்னைப் படைத்தாயுன்கருத்தை, நானேதெரிந்
தறியேனே நம்பினேன் கண்டருள்வாயே. அ

கண்டார்கண்ட காட்சியுநீ காணார்காணக்கள்வனு
நீ பண்டாருயிர்நீ யாக்கையுநீ பலவாஞ்சமயப் பகுதி

யுநீ யெண்டோன்முக்கட் செம்மேனியெந்தாய் நினக் கேயெவ்வாறு, தொண்டாய்ப்பணிவர்வர்பணி நீசூட்டிக்கொள்வ தெவ்வாறே. க

சூட்டியென தென்றிடுஞ்சுமையைச்சுமத்தி யென்னை யுஞ்சுமையாளாகக், கூட்டிப்பிடித்து வினைவழியே கூத் தாட்டினையே நினதருளால், வீட்டைக்கருதும்போது வெளியாமுலகைவியப்பனைத்துப், எட்டுக்கடங்காச்சொப் பனம்போ லெந்தாயிருந்தென் செல்வேன். ௰

---

## வம்பனேன்.

வம்பனேன் கள்ளங்கண்டு மன்னருள் வெள்ளராய, உம்பர்பாலேலவல்செய்யன் றுணர்த்தினையோசோமா னோர், தம்பிரானே நீசெய்ததயவுக்குங் கைம்மாறுண் டோ, எம்பிரானுய்ந்தேனுய்ந்தே னினியொன்றுங் குறைவிலேனே. க

குறைவிலா நிறைவாய்ஞானக் கோயிலானந்தவெள்ளத், துறையிலேபடிந்துமூழ்கித் துளைந்துநான்றோன்றுவாள், ளுறையிலேயுணர்த்தியோன வொண்சுடர்வோடாந்த, விறைவனையுனைப்பிரிந்திங்கிருக்கிலேனிருக்கிலே னிருக்கிலேனே. உ

இருநிலமாதிநாத மீறதாமிவைகடந்த
பெருநிலமாய தூய பேரொளிப்பிழம்பாய்நின்று
கருதருமகண்டானந்தக் கடவுளின்காட்சிகாண
வருமென்றழைத்தாலன்றிவாழ்வுண்டோவஞ்சனேற்கே

வஞ்சனையழுக்காறுந்தி வைத்திடும்பாண்டமான
நெஞ்சனைவலிதின்மேன்மே நெக்குநெக்குருகப்பண்ணி
அஞ்சலிசெய்யுங்கையு மருவிநீர்விழியுமாகத்
தஞ்சமென்றிரங்கிக்காக்கத் தற்பாரபரமுனக்கே. ச

உனக்குநானடித் தொண்டாகியுன்னடிக்கன்புசெய்ய, வெனக்குநீதோற்றியஞ்சே லென்னுநா ளெந்தநாளோமனக்கிலேசங்கடீர்ந்தமாதவர்க்கிரண்டற்றோங்குந் தனக்குநேரில்லாவொன்றே சச்சிதானந்தவாழ்வே. ரு

வாழ்வென வயங்கியென்னை வசஞ்செய்து மருட்டும்பாழ்த்த, ஊழ்வினைப்பகுதிகெட்டிங் குன்னையுங்கிட்டுவேனோ, தாழ்வெனுஞ்சமயநீங்கித் தமையுணர்ந்தோர்கட்கெல்லாம், சூழ்வெளிபொருளே முக்கட்சோதியே யமரரேறே. சா

ஏறுவாம்பரியாவாடை யிருங்கலையுரியாவென்றும்
நாறுகற்சாந்தநீறு நஞ்சேமேயமுதாக்கொண்ட
கூறருங்குணத்தேயுன்றன் குரைகழல்குறுகினல்லால்
வாறுமோதாபசோபம் அகலுமோவல்லலுறுனே. எ

தானமுந்தவமும்யோகத்தன்மையுமுணராவென்பா
ஞானமுந்தேவிட்டாவின்ப நன்மையுநல்குவாயோ

பானலங்கவர்ந்தநீஞ்சொற் பச்சிளங்கிள்ளைகாண
வானவரிறைஞ்சிமன்றுள் வயங்கியநடத்தினானே. அ

நடத்தியிவ்வுலகையெல்லாம் நாதநீநிறைந்ததன்மை
திடத்தொடனறிந்தானந்தத் தெள்ளமுதருந்திடாதே
விடத்திரளனையகாரு வேட்கையிலழுந்திமாயை
சடத்தினைமெய்யென்றெண்ணித் தளரவோதனியனேனே கூ

தனிவளர்பொருளேமாறாத் தண்ணங்கருணைபூத்த
இனியகற்பகமேமுக்க ணெந்தையேநினக்கன்பின்றி
கனிபெருங்குடிலங்காட்டு நயனவேற்கரியகூந்தல்
வனிதையர்மயக்கிலாழ்ந்து வருந்தவோவம்பனேனே

---

## சிவன்செயல்.

சிவன்செயலாலேயாதும் வருமெனத்தேறேனாளும்
அவந்தரு நினைவையெலலா மகற்றிலே னசைவெள்
ளாழ், கவாந்துடிழுப்பவந்தக் கட்டிலே ய்கப்பட்டை
யோ, பவந்தனையீட்டியீட்டிப் பதைக்கின்றேன் பாவி
யேனே. க

பாவியேனினியென்செய்கேன் பரமனேபணிந்து
ன்பதம், சேவியேன் விழிநீர்மல்கச் சிவசிவவென்றன்
தேமபி, ஆவியேநிறைவந்தவமுதமேயென்னேதோ
பாவிபோஞ் சமயத்தாழ்ந்து சகத்திடைத் தவிக்கின்
றேனே. உ

இடைந்திடைந்தேங்கி மெய்புளகிப்ப வெழுந்தெ ழுந்தைய நின்சரணம், அடைந்ததன்னிநீ கைவிடேலு னக்கேயபயமென் றஞ்சலிசெய்துள, உடைந்துடைந் தெழுது சித்திரப்பாவை யொத்து நானசைவறநிற்பத், தொடர்ந்து நீயென்னை யாட்கொள்ளு நாளென்றோ சோதியே யாதிநாயகனே. ரு

ஆதியாய்நடுவாய்ந்தமரய்ப்பந்தமாயாவுமற்றகம்பு றநிறைந்த, சோதியாய்ச்சுகமாயிருந்தவெம்பெருமான் றொண்டனேன் சுகத்திலேயிருக்கப்போதியாவண்ணங் கைவிடன்றுமுறையோபுன்மையைனென்செய்கேன்மன மோ, வாதியாநின்ற தன்றியும்புலன்சேர் வாயிலோதீயி னுங்கொடிதே. சு

வாயிலோரைந்திற் புலனெனும்வேடர் வாதெனை யீர்த்துவெங்காமத், தீயிலேவெதுப்பியுயிரொடுந் தின் னச்சிந்தைநைந்துருகிமெய்மறந்து, காயிலாச்சேய்போ லலைந்தலைப்பட்டேன் றுயினுங்கருணையாமன்று, ணுயக மாகி யொளிவிடுமணியே நாதனேஞானவாரிதியே. ரு

ஞானமேவடிவாய்த் தேடுவார்தேடு நாட்டமேநா ட்டத்துணிறைந்த, வானமேயெனக்கு வந்துவந்தோங் குமார்க்கமே மருளர்தாமறியா, மோனமே முதலே மு த்திநல்வித்தே முடிவிலா வின்பமேசெய்யுந், தானமே தவமே நின்னைநானினைந்தேன். தமியனேன் றனைமறப் பதற்கே. சு

மறமலியுலக வாழ்க்கையேவேண்டும் வந்துநின் னன்பர்தம்பணியா, மனமது கிடக்கினன்றி யானந்த வற்புத நிட்டையினிமித்தம், துறவதுவேண்டு மௌனி யாயெனக்குத் தூயநல்லருடரி னின்மை, பிறவியும்வே ண்டும்யாமெனதிறக்கப் பெற்றவர் பெற்றிடும்பேறே.

பெற்றவர்பெற்ற பெருந்தவக்குன்றே பெருகியக ருணைவாரிதியே, நற்றவத்துணையே யானந்தக்கடலே ஞானருஞானஞேயங்கள், அற்றவர்க்கறாத நட்புடைக் கலப்பே யனேகமாய் நின்னடிக்கன்பு கற்றதுங்கேள்வி கேட்டதுநின்னைக் கண்டிடும்பொருட்டன்றோ காணே.

அன்றுநால்வருக்கு மொளிநெறிகாட்டு மன்புடை ச்சோதியேசெம்பொன், மன்றுண் முக்கண்ணுங் காள கண்டமுமாய் வயங்கிய வானமேயென்னுட், டுன்றுகூ ரிளைத்துத் தூர்ந்திடுமதியே துன்பமு மின்பமுமாகி நின்றவாதனையைக் கடந்தவர்நினைவே நேசமேநின்பரம் யானே. கூ

யானெனலகாணேன் பூரணநிறைவில்யாதினுமிரு ந்தபேரொளிநீ,தானெனனநிற்குஞ் சமத்துறவென்னைத் தன்னவனாக்கவுந்தகுங்காண், வானென வயங்கியொன் றிரண்டன்னு மார்க்கமாநெறிதந்து மாறாத், தேனென ருசித்தன் பரைக்கலந்த செல்வமே சிற்பரசிவமே. கய

# தன்னையொருவர்.

தன்னையொருவர்க் கரிவரிதாய்த் தானேதானுயெ ங்குநிறைந், துன்னகரியபா வைளியாலவா வமுதாயொ ளிவிளக்கா யென்னுட்கலந்தா யானறியாதிருந்தாயிறை வா வினியேனு; நின்னைப்பேரு மாறெனக்கருளா நிலை யைக்கொடுக்க நினையாயோ. க

நினையுநினைவுக் கெட்டாத நெறிபெற்றுணர்ந்த வெறியாளா, வினையைக்கரைக்கும் பரமவின்ப வெற்றி ப்பெருக்கே நினதருளான், மனைவிபுதல்வரன்னை பிதா மாடுவீடென்றிடுமயக்கா, தனையுமறந் திங்குனை மறவா த் தன்மைவருமோ தமியேற்கே உ

வரும்போமென்னு மிருநிலைமை மன்னுதொருதன் மைத்தாக்கிக், கரும்போதேனேமுக்கனியோ வென்ன வென்னுட்கலந்துநலந், தரும்பேரின்பப் பொருளேநி ன்றன்னைநினைந்துநெக்குருக்கே, னிரும்போகல்லோ மர மோவெனனிதயமியாதென்றறியேனே. ந

அறியுந்தாமோநானுன்னை யறிவுக்கறிவாய் நிற்கை யினாற், பிரியுந்தரமோ யென்னைப் நீயெம்மானே பேரி ன்பமாய்ச் செயாப்பொருணீ நின்னையன்றிச் செறியா ய்ப்பொருளுன் பெரும்பேற்றை, தெரிநின்றெழுகவி சாரித்தா னிசைகோவில்லையெனக்காமே. ச

எனதென்பதும்பொய் யானெனல்பொய்யெல்லா மி ந்தவிடங்காட்டு. நினதென்பதும்பொய்நீயெனல்பொய் நிற்குநிலைக்கே நேசித்தேன், மனதென்பது மோவென் வசமாய் வாராதையோ நின்னருளோர், தனதென்பது க்குமிடங்காணேன் தமியேனெவ்வா றுய்வேனே. ரு

உய்யும்படிக்குன்றிருக் கருணையொன்றைக்கொடுத் தா லுடையாயப்பாழும். பொய்யும்வாவுமழுக்காறும் புடைப்பட்டோடு நன்னெறியா, மெய்யுமறிவுபெறும் பேறும் விளங்குமெனக்குனடியார்பாற், செய்யும்பணி யுங்கைகூடும் சிந்தைத்துயரந் தீர்த்திடுமே. சு

சிந்தைத்துயரென்றொருபாவி சினந்து சினந்து போர்முயங்க, நிந்தைக்கிடமாய்ச் சகவாழ்வை நிலையெ ன்றுணர்ந்தே நிற்கின்றே, னெந்தபடியுன்னருள்வாய் க்கு மெனக்கெப்படிநீ யருள்செய்வாய். பந்தத்துயரற் றவர்க்கெளிய பரமானந்தப் பழம்பொருளே. எ

பொருளைப்பூவைப் பூவையரைப் பொருளென்றெ ண்ணுமொருபாவி, இருளைத்துரந்திட் டொளிநெறியை யென்னுட்பதிப்ப தென்றுகொலோ, தெருளத்தெருள. வன்பாலெஞ்சந் தித்தித்திருகத் தெவிட்டாத, வருளோ ப்பொழியுங் குணமுகிலே யறிவானந்தத் தௌமுதே.

ஆராவமுதம்விரும்பினர் எறியவிடத்தையமிர்தா க்கும், பேரானந்தச்சித்தனெனும் பெரியோ யாவிக்குரி

கேள், காராகிரக விலையினிடைக் கட்டுண்டிருந்தகளே களெல்லா, மொராவிரருநாள் கையுணவே யறுண்டா மெனக்கிங் கொழிந்திடுமே. ௪

எனக்கென்றிருந்த வுடல்பொருளும் யானுநினவெ ன்றிந்தவண்ண, மனைத்துமிருந்துமிலதாக வருளாய் நில்லா தழிவழிக்காய், மனதுட்புகுந்து மயங்கவுமெ ன்மதிக்குட்களங்கம்வந்ததென்னே, தனக்கொன்றுவ மையறநிறைந்த தனியேதன்னந் தனிமுதலே. ௫

---

## ஆசையெனும்.

ஆசையெனும் பெருங்காற்றா டிலவம்பஞ் செனவு மனதலையுங்கால, மோசம்வருமிதனாலே கற்றதுங்கே ட்டதுந் தூர்ந்து முத்திக்கான, நேசமுநல் வாசமும் போய்ப் புலனாயிற் கொடுமைபற்றிநிற்பரந்தோ, தேசபழுந்தருள்பழுத்த பராபரமேநிராசையின்றேற்றெ ய்வமுண்டே. ௧

இராப்பானங்கொருவனவன் வேண்டுவகேட் டருள் செயன வேசற்றேதான், புறப்பான்றனருணாடியிருப் பதுபோலெங்குநிறை பொருளேகேளாய், மறப்பான் மை நெஞ்சினன்யான் வேண்டுவகேட் டிரங்கெனவோ மௌனத்தோடந், தரப்பான்மை யருணிறைவிலிருப் பதுவோ பராபரமே சுகசநிட்டை. ௨

ங்கனை மாட்டமாளிகைசூழும், சேதுமேவிய ராமநாய
கன்றனைச்சிந்தைசெய் மட்டுநெஞ்சே. ௰௪

அண்டமுமாய்ப் பிண்டமுமாயளவிலாதவாருயிரு
க்கோருயிரா யமர்ந்தாயானுற், கண்டவரார் கேட்ட
வராருன்றனுன்னைக் காணபதல்லா லென்னறிவாற்
காணப்போமோ, வண்டுளபமணிமார்பன் புதல்வனோ
டுமனைவியொடுங்குழ யிருந்து வணங்கிப் போற்றும்,
புண்டரிகபுரத்தினிறு தாந்தமென்ன போதாந்தநட
ம்புரியுங் புனிதவாழ்வே. ௰௫

பொரியிற்செறியைம்புலக்கனியைப்புந்திக்கவராற்
புகுந்திழுத்து,மருகிச்சுழலுமனக்குரங்கு மாளவாளா
விருப்பேனோ, அறிவுக்கறிவாய்ப் பூரணமாயகண்டா
னந்தமயமாகிப், பிரிவற்றிருக்கும்பெருங்கருணைப் பெ
ம்மானேயெம்பெருமானே. ௰௬

உரையுணர்விறந்துதம்மை யுணர்பவருணர்வினூடே
கரைவிலாவின்பவெள்ளங் காட்டிடுமுகிலேமாறாப்
பரையெனுங்கிரணஞ்சூழ்ந்த பானுவேநின்னைபற்றித்
திரையிலாநீர்போற்றசித்ததெளிவனோசிறியநேனே

கேவலசகலமின்றிக் கீழொடுமேலேயெங்கும்
மேவியவருளின்கண்ணாய்மேவிடமேலாயின்பம்
தரவிடவின்பாதீதத் தனியிடையிருத்திவைத்த
தேவெனுமேனிசெம்பொற் சேவடிசிந்தைசெய்வாம்.

நேற்றுளா ரின்றுமாளார் நின்றனரதனைக் கண்டும் போற்றிலேனின்னையந்தோ போக்கினேன் வீணேகா லமாற்றிலேன் கண்டாரங்தவ்வணமே யளவின்மாயைச், சேற்றிலேயின்னும்வீழ்ந்து திளைக்கவோ வறியனேனே. ௯௬

போதமென்பதே விளக்கொவ்வு மவித்தை பொய்யிரு ளிலாவிளக்கெடுத்திரு ட்டவஞ்சிக்கா [ளாங்
காதலாலறிவாய்நின்றவிடத்தறியாமை
யேதுமில்லையென்றெம்பிரான் சுருதியேயியம்பும் ()

சுருதியேசிவாகமங்களே யுங்களாற்சொல்லு
மொருதனிப்பொருளளவையீதொன்னவாயுண்டோ
பொருதிரைக்கடலுண்மண லெண்ணினும்புகலக்
கருதவெட்டிடாநிறைபொரு ளளவையார்காண்பார்

மின்னைப்போன் றனவகில மென்றறிந்து மெய்ப்பொருளா. முன்னைப்பொன்ற நற்பரம்பொருளில்லை யென்றோர்ந்து, பொன்னைப் போன்றநின் போதங்கொண்டுன்பணி பொருந்தா, வென்னை போன்றுளா வேழையரையவிங்கெவரே. ௯௮

தாயுந்தந்தையுமெனக்குறவாவதும்சாற்றின்
ஆயுநீயுநின்னருளுநின் னடியருமன்றோ
தமயனேன்றிருவடியிணைத்தாமரைபிடித்தேன்
நேயனேயெனையாளுநடை முக்கணுங்கனே. ௯௯

காந்தமதையெதிர்காணிற் கருந்தாதுசெல்லுமந்த காந்தத்தொன்று, செய்ந்துவிட்டெங்கே தானங்கே

தான் சலிப்பாவுமிருக்குமாபோல், சாந்தபதப்பரம்பொ
ருளேபற்றுபொரு ளிருக்குமத்தார், சலிக்குமசித்தம்
வாய்ந்தபொரு ளில்லையெனிற் பேசாமைநின்றநிலை யா
ய்க்குமன்றே. ௨௧

பொற்புறுங்கருத்தேயக மாயதிற்பொருந்தக்
கற்பனமங்கையரெனவிழி கதவுபோற்கவனச் [ஆ
சொர்ப்பனத்திலுஞ்சோர்வின்றி யிருந்தநான்சோர்ந்
நிற்பதற்கிந்தவினை வந்தவாறென்கோனிமலா. ௨௨

வந்தவாறிந்தவினைவழி யிதுவெனமதிக்கத்
தந்தவாறுண்டோவுள்ளுணர் விலையன்றித்தமியேன்
நொந்தவாறுகண்டிரங்கவு மிலைசுற்றநாலா
லெந்தவாறினித்தற்பரா வுய்குவேனேழை. ௨௩

சொல்லாலும்பொருளாலு மளவையாலுந்தொடர
வொண்ணா வருநெறியைத்தொடர்ந்துநாடி, நல்லார்
கள்வையகத்தை யிருக்கவைத்தாய் நன்னர் நெஞ்சந்
தன்னலமு நணுகுவேனோ, வில்லாளியாயுலகோடுயி
ரையீன்றிட் டெண்ணறியயோகினுக்குமிவனேயென்
னக், கல்லாலின்கீழிருந்த செக்கர்மேனிக் கற்பகமே
பராபரமே கயிலைவாழ்வே. ௨௪

சாக்கிரமாநுதலினி லிந்திரியம்பத்தும் சத்தாதிவச
னாதி வாயுபத்தும், நீக்கமிலந்தக்கரணம் புருடனோடு
நின்றதுமுப்பானைந்து நிலவுங்கண்டத், தாக்கியசொ
ப்பனமதனில் வாயுபத்தும் அடுத்தனசத் தாதிவசனு

ருந்து,மில்லிலர்தன்மைந்தர்மனைவியில்லரெனத்தரு
மே, சலமிலான்முத்தி தரும்பரசிவனெனத் தருமே.

கடத்தைமண்ணென வுடைந்தபோதேவிந்தக்கருமச்
சடத்தபொய்யெனவிறந்தபோதேசொலத்தருமம்
விடத்தைநல்லமிர்தாவுண்டுபொருதுவெளிக்கே
நடத்தைக்காட்டி யெவ்வுயிரையுநடப்பிக்குநலத்தேதாய்.

நானெனவுநீயெனவு மிருதன்மைநாடாம னடுவேவ
மா, தானமருலையிதுவே சத்தியஞ்சத்தியமெனத்த
மியனேற்கு, மோனகுருவாகியுங் கைகாட்டினையேயி
ருப்பவுநான் முனைத்துதோன்றி, மானதமார்க்கம்புரி
ந்திங் கலைந்தேனேபரந்தேனே வஞ்சனேனே. ௩௨.

தன்மயஞ்சுபாவஞ்சுத்தந் தண்ணருள்வடிவஞ்சார்ந்த
சின்மயமானவண்ட வெளியுருவானபூர்த்தி
யென்மயமெனக்குக்காட்டா தெனையபகரிக்கவந்த
சின்மயமகண்டாகாரந் தக்ஷிணாமூர்த்தம். ௩௩.

சிற்றரும்பன்சிற்றறிவாளனேதெளிந்தான்
மற்றெரும்பெனமலரெனபோறிவாகிக்
கற்றரும்பியகேள்வியான் மதித்திடக்கதிச்சிர்
முற்றரும்பியமவுனியாய்ப் பரத்தடைமுனைப்பான். ().

மயக்குசிந்தனைதெளிவென் விருநெறிவகுப்பால்
மயக்குமொன்றன்பா லொன்றிலையென்னலவழுக்கே
வியக்கமுற்றிடுமயக்கத்திற் றெளிவுறலினிதாம்
பயக்கவல்லதோர் தெளிவுடையவற்கெய்தல்பண்போ

அருள்வடி வேறுமூர்த்தம் வைகள்சோபானமென்
றே, சுருதிசொல் லியவாற்றாலே தொழுந்தெய்வமெ
ல்லாமொன்றே, மருவினைக்கில்லை முன்பின்வெருறிக
க்கில்வைப்புக்குத், தெருளின்முன் னிலையாமுன்னைச்சே
ர்க்கியான் றெளிகின்றேனே. ௧௬

எத்தனை பிறப்போ வெத்தனை யிறப்போ வெளிய
னேற் கிதுவரையமைத்த, தத்தனையெல்லாமறிந்தநீ
யறிவையறிவிலியறிகிலேனந்தோ, சித்தமும்வாக்குந்
தேகமுமினைவே சென்மமுமினியெனலாற்று, வைத்தி
டாதென்னை நின்னடிக்குடியா மறைமுடியிருந்த வா
ன்பொருளே. ௧௭

வான்பொருளாகி யெங்குநீயிருப்பவந்தனைக்கொ
டுத்துநீயாகா, தேன்பொருள்போலக்கிடக்கின்றேன்
முன்னை யிருவினைவாதனையன்றோ, நின்பொருளான
வுயிர்தமேநின்னைச் சிந்தையிற் பாவனைசெய்ய, நான்
பொருளானல்லமே நானிறந்திருப்பதுநாட்டம். ௧௮

நாட்டமூன்றுடைய செந்நிறமணியே நடுவுறு நாயக
விளக்கே, கோட்டமில் குணத்தோர்க் கெளியநிர்க்கு
ணமேமேகோதிலாவமிர்தமேநின்னை, வாட்டமினெஞ்சங்
கின்னமாச்சேர்த்து வாய்மடுத்தருந்தினனுங்கே, பா
ட்டினிகறவை முண்டயர்ந்து போற் பற்றயர்ந்திருப்ப
தெந்நாளோ. ௧௯

என்னுடையுயிரே யென்னுளத்தறிவே என்னுடை
யன்பெனு நெறியாய், கன்னன்முக்கனிதேன் கண்ட

மிர்தென்னக் கலந்தெனை மேவிடக்கருணை, மன்னியனி
லுறவே யுன்னைநான்பிரியா வண்ணமென்மனமேலுங்
கருவி, தன்னதுவழியிற் றென்னுழைக் கிடப்பத்தண்
ணருள் வரமதுவேண்டும். ௪௰

## எனக்கெனச்செயல்.

எனக்கெனச்செயல்வே றிலையாவுமிங்கொருநின்
றனக்கெனத்தகுமுடல்பொரு ளாவியுந்தந்தேன்
மனத்தகத்துளவழுக்கெலா மாற்றியெம்பிரானீ
நினைத்ததெப்படியப்படி யருளுதனீதம். ௧

உளவறிந்தெலாநின்செய லாமெனவுணர்ந்தோர்க்
களவிலானந்தமளித்தனை யறிவிலாப்புன்மைக்
களவுநாயினேற்கிவ்வண மமைத்தனைகருத்துத்
தளருந்தன்மையிங் காரொடும்புகலுவேன்றக்கோய். ௨

என்னைத்தானின்னவண்ண மெனவறிகிலாவேழை
தன்னைத்தானறிந்திட வருள்புரியெற்றக்கோய்
பின்னைத்தானின்றனருள் பெற்றமாதவப்பெரியோர்
நின்னைத்தானிகரென வாழ்த்துவர்நெறியால். ௩

ஏதமின்றித்தன்னடியினைக் கன்புதானீட்டும்
காதலன்பர்க்குக்கதிநிலை யிதெனக்காட்டும்
போதநித்தியபுண்ணிய வெண்ணரும்புவன
நாதநற்பரநானெவ்வா றுய்குவேநவிலாய். ௪

வேதமொத்தனையொத்தனை சிரத்திலும்விளங்கும்
பாதநித்தியபரம்பர நிரந்தரபரம
நாதகற்பராசிற்பர வடிவமாய்நடிக்கு
நீதநிர்க்குணநினையன்றி யொன்றுமெண்ணிலேனே. ௫

நெறிகடாம்பலபலவுமா யந்தந்தநெறிக்காம்
செறியுந்தெய்வமும்பலபல வாகவுஞ்செறிதா
லறியுந்தன்மையிங் காருனையறிவினாலறிந்தோர்
பிரியுந்தன்மையில்லாவகை கலக்கின்றபெரியோய். ௬

பெரியவண்டங்களெத்தனை யமைத்ததிற்பிறங்கு
முரியபல்லுயிரெத்தனை யமைத்தவைக்குறுதி
யருளலெத்தனையமைத்தனை யமைத்தருள்வளர்க்கு
மரியதத்துவ வெனக்கிந்த வண்ணமேனமைத்தாய். ௭

கணமதேனுநின் காரணந்தனையேகருதி
குணமிலாதபொய்வஞ்சனுக் கெங்ஙதநிர்க்குணமா
உணருலாதவர்க்கானந்த முதவினையொன்றும்
மணவுலாமலர்ப்பதத்தரின் யாருனைமறுப்பார். ௮

கன்னன்முக்கனிகண்டு தேன்சருக்கரைகலந்த
தென்னன்முத்தியிற்கலந்தவர்க் கின்பமாயிருக்கு
நன்னலத்தநின்னற்பதந் தனையெனநம்பச் [ன்
சொன்னவர்க்கெனாலாங்கை மாறில்லையென்சொல்வே

தந்தைதாய்தமர்மகவெனு மவையெலாஞ்சகத்திற்
பந்தமாமென்னேயருமறை வாயினார்பகர்ந்த

சூதகத்தனையாதி னுமிச்சைமேற்றேன்றும்
வாதனைக்கிடமாயினே னெவ்வணம்வாழ்வேன். உக

தெளிவொமட்கையேர்வறிகிலா னறிவிலான்சிறிது
மளியிலானிவன்றிருவருட் கயலெனவரிந்தோ
வெளியனுக்கினையென்செய்வே னென்செய்வேனெல்
லொளியுமாய்நிறை வெளியுமாயாவுமாமுரவோய். ()

கண்ணினுண்மணியென்னவே தொழுமன்பர்கருத்து
ணண்ணுகின்றநின்னருளெனக் கெந்தநாணனுகு
மண்ணுவிண்ணுமற் றுள்ளனபூதமுமாருப்
பெண்ணுமாணுமாயல்லவாய் நிற்கின்றபெரியோய்.

சகமெலாந்தனிபுரந்தனை தகவுடைத்தக்கோ
ரகமெலாநிறைந்தானந்த மாயினையளவின்
மகமெலாம்புரிந்தோரை வாழ்வித்தனைமார
விகமெலாமெனைப்பிறந்திடச் செய்ததேனெந்தாய்.

ஏய்ந்தநல்லருள்பெற்றவர்க் கேவலாயெளியேன்
வாய்ந்தபேரன்புவளர்க்கவுங் கருணைநீவளர்ப்பா
யாய்ந்தமாமறையத்தனை யத்தனையறிவாற்
றேய்ந்தபேர்கட்குதோன்றிலா தோன்றலாந்தூயோ

தக்கநின்னருட்கேள்வியோ சிறிதின்றித்தமியேன்
மிக்கதெய்வமேநின்னின்ப வெள்ளத்தில்விழு
ஞெய்கராய்தந்தைமகளனும்பாசக்கட்டுடனே[...]
துக்கவெள்ளத்திலாழ்கின்றே னென்செய்வான் துணி

பவம்புரிந்திடும்பாவியேற் கருணிலைநதியத்
தவஞ்செயும்படித் தயவுசெய் தருள்வதே தருமம்
மனம்புரிந்திடார்க்கானந்த வமிர்தத்தையளிக்க
வேங்கோடத்துவத் திறையெறிகடலெனுநலத்தோய்.

உற்றுணர்ந்தெலாநீயல தில்லையென்றுனையே
பற்றுகின்றனையெந்தைநின் னடியர்யான்பாவி
முற்றுமாயமாஞ்சகத்தையே மெய்யெனமுதறு
னற்றிருந்திடத்தொழில்செய்வான் றனைநிகரானேன்.

---

மண்டலத்தின்.

மண்டலத்தின் மிசையொருவன் செய்தவித்தை
யிகோவெனவும் வாரணாகி, யண்டமவை யடுக்கடுக்கா
யந்தரத்தி னிறுத்துமவ தானமபோல, வெண்டருநல்
லகிலாண்ட கோடியைத்தன்னருள்வெளியிலகலவை
த்துக், கொண்டுநின்றவற்புதத்தை யெவராலுநிச்சயி
க்கக் கூடாவொன்றை. ௧

ஒன்றிரண்டாய்விவகரிக்கும் விவகாரங்கடந்தேறா
ம்யோகபூமி, நின்றுதெளிந்தவர்பேசா மௌனநியாய
த்தை நிறைநிறைவைத் தன்னை, யன்றியொருபொரு
ளிலதாயெப்பொருட்குந்தான்முதலாயசலமாகி, யெ
ன்றுமுள்ளவின்பத்தைத் தண்ணென்ற சாந்தபதவிய
ர்க்கைதன்னை. ௨

பதமுன்றுக்கடந்தவர்க்கு மேலானஞானபதப் பரிசுகாட்டிச், சதமாகிநிராலம்ப சாக்ஷிபதா யாரம்பத்தன்மையாகி, விதமியாவுங் கடந்தவித்தை யெனுமிருளைக்கீண்டெழுந்து விமலமாகி, மதமாறுங்காணுதவானந்தசாகரத்தை மௌனவாழ்வை. ௫

வாழ்வனைத்துந் தந்தவின்ப மாகடலை நல்லமிர்தை மணியைப்பொன்னைத், தாழ்வறவென் னுளத்திருந்த தத்துவத்தை யத்துவித சாரந்தன்னைச், சூழ்பெரும் பேரொளியை யொளிபரந்தபர வெளியையின்பச்சுகத்தைமாறு, வேழுலகுங் கலந்தின்றாய் நானையாயென்றுமா மியற்கைதன்னை. ௬

தன்னையறிந்தவர் தம்மைத் தானாகச்செய்தருளுஞ் சமத்தைமேலாக, மின்னைநிகர்த்திடவழியாச்சொருபானந்தச் சுடரைவேதமாதி, யென்னையறிவரிதெனனச் சமயகோடிகளுநடைய விடையுறாக, பொன்னைவிரித்திடுமுலகத் துப்பருமிம் பரும்பரவும் புனிதமெய்யை.

பரவரியபரசிவமா யதுவெனலாய்நானெனலாய்பாசசாலம், விரவிநின்றவிசித்திரத்தை யைக்யபதத்தினிதிருந்த விவேகந்தன்னை, யிரவுபக னினைப்புமறப் பேனுந்தொந்தமறியார்க ளிதயவேதச், சிரமௌன வாழ்பராபரத்தை யானந்தநீங்காத சிதாகாசத்தை. ௮

அத்துவிதவனுபவத்தையனந்த மறையின்னமின்னமறியமென்னுநித்தியத்தைநிராமயத்தைநிர்க்குணத்தைதன்னருளானினைவுக்குள்ளேவைத்துவைத்துப்

ராத்தானுக்கெவ்வாறெம்வளர்த்துக்காக்குஞ்சித்தினை
மாதுவெளியைத்தன்மயமானந்தத்தெய்வந்தன்னை.

தன்னிலேதானாகிநினைந்துகனிந் தவிழ்ந்துசுகச
மாதியாகப், பொன்னிலேபணிபோலுமாயைதருமன
மென் புரைகடீர்ந்தா, லென்னிலே யான்பிழைப்பே
னெனக்கினியா ருன்போல்வா ரில்லையில்லை, யுன்னி
லோரிருவருருக்கொப்பவர் யென்னுயிர்க்கோருறவு
மாவாய். (அ)

உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை
யொழிந்துதள்ளற், காவுமரிதரிதன்றோவிகபரமுமுன்
னையன்றி யாவதுண்டோ, வறிகிலுன்னை யசத்தென்
னல் வழக்கன்றுசத்தெனவும் வாழ்த்துவேனென், சி
றுமைகெடப் பெருமையின் சன்மதேயத்தினின் செ
ல்லல்வேண்டும். (கூ)

வேண்டியவா றென்றேனும் பழகியநீ யெனைப்
பிரிந்த விசாரத்தாலே, மாண்டுகிடக்கினு மந்தவெ
ல்லையையும்பூரணமாவணக்கஞ்செய்வே, னண்டகுரு
வெனவிதன்றேல் யாரெனதற் றவனருளை ளைவேன்
னுயிர்ந், காண்டகவிவன் சித்திமுத்தியெனக்குண்டாமு
ன்றேலென்கவலைதீர்வேன். (கய)

நீராதி யென்சனன்வழக்கெல்லாந் தீருமிந்தச்சன
னத்தோடே, யாரேனுமறிவரியசிவன் முத்தியுண்டா
தமைய வையோ, காரேனுங் கற்பகப்பூங் காவேனு

முனக்குவமைகாட்டப் பேசமோ, பாராதியரக்லெழு மண்டலத்தினின் மகிமைபகரலாமோ, (கக)

## பாயப்புலி.

பாயப் புலிமுன மான்கன்றைக்காட்டும் படியகில மாயைப் பெரும்படைக்கேயிலக் காவெனைவைத்தனை நீயெப்படிவகுத்தாலுநன்றேநின் பெருங்கருணை [யோ தாயொத் தடியர்க் கருள்சச்சி தானந்ததற்பரமே(க)

தற்பரமாஞ்சிற் பரமாகிமன்றந்தனினடித்து, நிற்ப ரம்போருகன் மால்பணி நீதாரென்னஞ் சகமாங்கற்ப ரந்தாங்குக் கரைந்திடவாறைத்த காட்சிநல்கும்பொ ற்பரமாயென்வினைக்கருந்தாதைப்பொடிசெய்ததே.

செய்யுந் தவஞ்சற்று மில்லாதநாளும் றிருவடிக்க கொய்யும்புது மலரிட்டுமெய்யன்பர் குழாத்துடனே கையுஞ்சிரம்சைக் கூப்பிநின்றுடிகசிந்துருகி யுய்யும்படிக்கருள் செய்வதென்றோபுலியூரத்தனே(௩)

அத்தனைச் சிற்றம் பலவனையென் னுயிராகிநின்ற சுத்தனைச் சுத்தவெளியானவனைசுகவடிவா நித்தனை நித்தநிராதரமாகிய நின்மலனை [மே பெத்தனே நான்செல் லுமோமனமேகண்டிறைஞ்சுதற்

கண்டாருளத்தினிற்கயலூான்றிப்பெய்யுங்கருணைமு கி, லண்டார்புரத்துக்கு மன்பர்வினைக்குமசனிதன்னை க், கொண்டாடிஞர்முனங்கூத்தாடுமத்தன் றன்கோல

மெல்லாம், விண்டலிழ்மாவென் றுங்காணாதுவெட்ட-
வெறுவெளியே.

வெளியானதீ யென்மனவெளியூடுவிரவினையாவெ
ளியாருங்கண் ணுமிரவியும்போனின்றுலாவுவன்கரண
ளியாருங்கொன்றைக் சடையாடவம்புலியாடகங்கை
நுளியாடமன்றனடமாடு முக்கட்சுடர்க்கொழுந்தே,

கொழுந்தாதுறைமலர்க்கோதையர் மோகக்குரை
கடலிலழுந்தாத வண்ண நின்பாதத் புணைந்தருள்
வதென்றே வெழுந்தாதரவு சேயெம்பெருமானென்
றிறைஞ்சிவிண்ணோர், தொழுந்தாதையேவென்பொ
டி பூத்தமேனிச்சுகப்பொருளே. (எ)

சுகமாகுஞானந் திருமேனி யாகல்லதொண்டர்தங்
க, ளகமேபொற் கோயிலெனமகிழ்ந்தேமன்றுளாடிய
கற், பகமேயுன் பொன்னடி நீழல்கண்டாலன்றிப் பா
விக்கிந்தச், செகமாயை யானவருங்கோடை நீங்குந்
திறமிலையே. (அ)

நீங்காதுயிருக் குயிராகி நின்றநினையறிந்தே, தூங்
காமற் றூங்கினல்லாதே யெனக்குச்சுகமுமுண்டோ,
ஓங்கார மாமைந்தெழுத்தாற் புவனத்தையுண்டுப
ண்ணிப்பாங்காநடத்தும்பொருளே யகண்டபரசிவமே.

சிவமர்த்திநான்முகக் கோவந்த மாமறை செப்புகின்
ற, நவமாயிலங்கியவொன்றே யிரண்டற்றநன்மைபொ
ரு, தவமேதருமைப் புலப்பொறிக்கே யென்னரிய

ஞ்சி, நில்லேநல்யோகநெறியுஞ்செய்யேனருணிலையொ
ன்றுங், கல்லேனெவ்வாறுபரமே பரகதிகாண்பதுவே
ஒன்றுந் தெரிந்திடவில்லையென் னுள்ளத்தொரு
வெனக், கென்றுந்தெரிந்த விளையவைகேளிரவும்பக
லுங் குன்றுங்குழியும் வனமுமலையுங் குறைகடலுமன்
றுமனையு மனமாதிதத்துவ மாயையுமே. (௧௨)

பழுதுண்டுபாவையர் மோகவிகாரப் பாலையிடை
விழுகின்றபாவிக்குந் தன்றாட்புணையை வியந்தளித்தா
ன், றொழுகின்ற வன்பருளக்கனிகூரத் துலங்குமன்று
ளெழுகின்ற வானந்தக் கூத்தனென் கண்மணி யென்
னப்பனே. (௧௩)

அழுக்கார்ந்த நெஞ்சுடையேனுக் கையா நின்னரு
ள்வழங்கு, விழுக்காகுமென் றெண்ணியோ விரங்காத
வில்புகண்டாய், முழுக்காதலாகி விழிநீர் பொருக்கிய
முத்தரெனுங், குழக்கா நின்று நடமாடுந் தில்லைக்
கொழுஞ்சுடரே. (௧௪)

ஆலம்படைத்தவிழியார் கண்மால்கொண்டவர்செ
யிந்த்ரசாலம், படைத்துத்தளர்ந்தனை யேயென்றுந்த
ண்ணருள்கூர், கோலம்படைத்துக்கல் லாலடிக்கீழ்
வைகுங்கோவுக்கன்பாங், காலம்படைக்கத் தவம்படை
யாதென் சொல்கன்னெஞ்சமே, (௧௫)

சும்மாவிருக்கச் சுகஞ்சுகமென்று சுருதியெல்லா
மம்மாநிரந்தரஞ் சொல்லவுங்கேட்டு மறிவின்றியே
பெம்மான்மவுனமொழியையுதப்பியென்பேதைமையால்

தன்மயமான சுபாவத்தின் மெள்ளக் கலைப்படுங்கா
ன், மின்மயமான சகம்யாதுரைத்தென் வெளியிலுய்
த்தசின்மயமுத்திரைகையேமெய்யாகத் தெளிந்தநெ
ஞ்சேசின்மயமென்மய மெல்லாநிறைந்த நிராமயமே.
ஆயுங்கலையுஞ்சுருதியுங் காண்டற்கரியவனைத்
தோயும்படிக்குக்கருணைசெய்வாய்சுகவாரிப்பொருளே
தாவும்பிதாவுந்தமருங் குருவுந்தணிமுதலு
மீயும்பரையுமென்றேயுணர்ந்தேனி துநிச்சயமே. (சங)
அல்லும்பகலுமுனக்கே யபயமபயமென்று, சொல்
லுஞ்சொல்லின்னந்தெரிந்ததன்று துதிப்பார், கண்மன
க்கல்லுங் கரைக்குமவுனவுன து கருணையென்பாற்செ
ல்லும்பொழுதல்லவோ செல்லுவேனந்தசிற்சுகத்தே.
எல்லாஞ் சிவன்செயலென்றறிந்தா லவனின்னருளே,
யல்லாற்புகலிடம்வேறுமுண்டோ வதுவேநிலை
யா, நில்லாயுன்றற்றமியேற்குக் கதியுண்டிங்நீணிலத்
திற், பொல்லாமாயக்கத்திலாழ்ந்தாவதென்னபுகனெ
ஞ்சமே. (சரு)
ஒளியேயொளியி னுணர்வேயுணர்வி னுவகைபொ
ங்குங், களியேகளிக்குங்கருத்தே கருத்தைக் கவளங்
கொண்ட, வெளியேவெளியின் விளைசுகமேசுகர்வீடு
கண்டு, தெளியேன்றெளிந்தவரைப் போற்றிடேனெ
ன்செய்குவனே. (சசு)
மறக்கின்றதன்மை யிரத்தலொப் பாகுமனந்தொ
ன்றிற், பிறக்கின்றதன்மை பிறத்தலொப்பாகுமிப்பே

ய்ப்பிறவி, யிருக்கின்ற வெல்லைக்களவில்லையே இந்தச் சன்மமல்ல, லுறக்கின்றனர்ளைக்தநாள்பரமேநின்றெ ழும்பனுக்கே. (சஎ)

காட்டியவக்தக்கரணமும் மாயையிக்காயமென்று சூட்டியகோலமுநானு வியக்கத்துறையிதனு ளொட்டியநான்றனக்கென்றே றறிவிற்றநானிவற்றைக் கூட்டிநின்றூட்டினையேபரமேநல்ல கூத்திதுவே. சஅ

பொல்லாத மார்க்கடமனமே யனைப்போலடுத்த, வெல்லாதறையும்பற்றி கொண்டனையேயென்னைநின் மயமா, நில்லாயருள்வெளிநீதாணிற்பேனருணிட்டை யொரு, சொல்லாற்பதிந்து பரிபூரணனந்தோய்கு வனே. (சகூ)

வாராய்நெஞ்சேயுன்றன் றுன்மார்க்கம் யாவையும் வைத்துகட்டியுங், காராயடிக்கடிசுற்றுகின்றாயுன்னவ லமதிக், கோராயிரம்புத்திசொன்னுலுமோர்திலையோ கெடுவாய், பாராயுனைக்கொல்வேன்செல்லுவேனருட் பாங்குகொண்டே. (ருய)

மாதத்திலேயொரு திங்களுண்டாகி மடிவதைநின் போதத்திலேசற்றும் வைத்திலையே வெரும் புன்மை நெஞ்சே, வேதத்திலேதர்க்க வாதத்திலேவிளங்காது விந்து, நாதத்திலேயடங்காத தந்தவரன் பொருளைடி க்கொள்ளே. (ருக)

எங்கும்வியாபித் துணர்வாயுனக்கென் னிதயத்து ளே, தங்குந்துயரந் தெரியாதவண்ணந் தடைசெய்த

தா, ரங்கங்குழைந் துள் ளுருகுமன்பாளர்க் கணைகடந்
து, பொங்குங்கருணைகடலே சம்பூரணபோதத்தனே.

வையகமாதர் சுகத்தையும்பொன்னையு மாயைமல
மெய்யையு மெய்யென்று, நின்னடியார் தம விவேகத்
தையுமையமில்வீட்டையு மெய்ந்நூலையும்பொய்யதா
கவெண்ணும், பொய்யர்தந்நட்பை விடுவதென் றோப
ரிபூரணமே. (௫௩)

அளியுங்கனியொத் தருவினையாளுந்தயவுருவென்
றெளியும்படிக்கிப் பரிபாககாலமுஞ்சித்திக்குமோ
வொளியுங்கருணையு மாறாதவின்பமுமோருருவாய்
வெளிவந்தடியர்களிக்கநின்றாடும் விழுப்பொருளே.

அடையார் புரஞ்செற்ற தேவேநின் பொன்னடிக்க
ன்புசற்றும், படையாகவென்னைப் படைத்திந்தப்பாரி
ற்படர்ந்தவினைத் தடையாற் றளையிட்டு நெஞ்சம்புண்
ணாகத்தளரவைத்தா, யுடையாயுடைய படியன்றியா
ன்செய்த தொன்றிலையே. (௫௫)

ஆடுங்கரங்குந்திரிகையும்போல வலைந்தலைந்து
காடுங்கரையுந்திரிவதல்லாநின் கருணைவந்து
கூடும்படிக்குத்தவமுயலாத கொடியனெமன்
றேடும்பொழுதென்னசெய்வார் பராநந்தசிற்சுடரே.

கற்றும்பலபலகேள்விகள்கேட்டுங் கறங்கெனவே,சு
ற்றுந்தொழில்கற்றுக் கின்றின்பத்தூடுகழலினென்று
ங், குற்றங்குறைந் துகுணமேலிடுமன்பர்கூட்டத்தையே
முற்றுந்துணையென நம்புகண்டாய் சுத்தமுடநெஞ்சே.

நீயெனாகானெனவேறில்லையென் ஹுநினைவருளத்தா
யெனமோனகுருவாகிவந்துதடுத்தடிமைச், சேயென
க்காத்தனையே பரமேநின் றிருவருளுக், கேயென்ன
செய்யுங் கைம்மாறுளதோசுத்தவேழையனே. (௫௮)

ஆத்திரம்வந்தவர்போலலையாம லரோகதிகம், காத்
திருந்தென்னை யென்னைபோலுங் கருணைவைத்தி
மாத்திரம்முன்னின் றுணர்த்தினையே மவுனவினிநா
ன், சாத்திரஞ்சொன்ன மடியியமாதியுஞ் சாதிப்பனே

## உடல்பொய்யுரவு.

நேரிசைவெண்பா.

உடல்பொய்யுறவாவி னுணவையுறவாகக்
யுடவாரார்தண்ணருளேகண்டா-திடமுடனே
கற்றப்பார்மோனவொரு சொல்லேயுண்மைநன்றாப்
பற்றிப்பார் மற்றவெல்லாம்பாழ். (க)

பாராதிபூலமெய்யாய் பார்க்குங்காலம்பரத்தின்
சீராகநிற்குந்திறங்கண்டாய்-நேராக
நிற்குந்திருவருளி னெஞ்சேயாநிற்பதல்லாற்
கற்குநெறியாதினிமேற் காண். (உ)

மெய்யானதன்மை விளங்கினல்யாக்கெனும்
பொய்யானதன்மை பொருந்துமே-வையாமே

மன்னுநிராசையின்னம் வந்ததல்லவுன்னடிமை,
என்னுநிலையெய்துமாறென். (௩)

அறியாமைமேலிட் டறிவின்றிநிற்குங்
குறியேற்கறிவென்ற கோலம்-வறிதேயா
நீயுணர்த்தநாணுணரு நேசத்தோவறிலென்
றேயெனக்கோர் நாமமிட்டதே. (௪)

எதுக்குச்சும்மா விருமனமேயென்றினக்குப்
போதித்தவுண்மையெங்கே போகவிட்டாய்வாதுக்கு
வந்தெதிர்த்தமல்லரைப்போல் வாதாடினையேயுன்
புந்தியென்ன போதமென்னபோ. (௫)

சகமனைத்தும்பொய்யெனவே தானுணர்ந்ததாற்றுக்க
சுகமனைத்தும்பொய்யன்றோ சோரா-திகபரத்தும்
விட்டுப்பிரியாத மேலானவத்துவிதக்
கட்டுக்குளாவதென்றோகாளே. (௬)

சற்கண்டோதேனோ கனிரசமோபாலோவென்
சொற்கண்டாதேதெனநான்சொல்லுவேன்வற்கண்ட
வானமதிகாணமவுனத்தளித்த
தானமதிலூறுமமிர்தம். (௭)

கேட்டலுடன்சிந்தித்தல் கேடிலாமெய்த்தெளிவால்
வாட்டமறுவுற்பவநோய் மாறுமே-நாட்டமுற்று
மெய்யானநிட்டையினை மேவினவர்கட்கன்றோதான்
பொய்யாம்பிறப்பிறப்பும் போம். (௮)

மாயசகத்தை மதியாதார்மண்முதலா
யேயானதத்துவத்தி லெய்துவரோநேயானு
பூதிநிலைநிற்கப் பொருந்துவர்களன்னவர்த
நீதியையேயோர்மனமே. (௯)

இகமுழுதும்பொய்யெனவே யேய்ந்துணர்ந்ததாலா
மிகவளரவந்தவருண் வெய்யே-யகநெகிழப் [கே
பாநீரொருசொற்படியேயனுபவத்தைச்
சேரீரதுவேதிறம். (௰)

ஆரணங்களாகமங்கள் யாவுமேயானந்த
பூரணமேயுண்மைப் பொருளென்னுங்-காரணத்தை
யோராமேயாவுள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ்வுண்மையி
னைப், பாராயோநெஞ்சேபகர். (௰௧)

நேராயம்மௌனநிலை நில்லாமல்வாய்பேசி
யாராயலைந்தீர்நீ ராகெடுவீர்-தேரீர்
திரையுந்திரையுந்திச் சென்னியனைநாலாற்
கரையுங்கரையுமனக் கல். (௰௨)

அற்பமன்மே யகிலவாழ்வத்தனையுஞ்
சொற்பனங்கண்டாயுண்மை சொன்னேனுன்-கற்பனை
றில்லாவிடத்தே யெனைச்சும்மாவைத்திருக்கக்
கல்லாய்நீதானோர்கவி. (௰௩)

எதுந்திருவிளி னிச்சையாமென்றென்றிறப்
போதும்பொருந்துபுணர்பாற்-றீதுநெறி

செல்லுமோசெல்லாதே செல்லுமிடமின்பமலாற்
செல்லுமோவேதத்தொனி. (௰சு)

கல்லேனுஞ்சில்லேனுங் கட்டியேனும்போலச்
சொல்லேனப்பாழ்த்த துளைச்செவுகொண்-டல்வேறு
நெஞ்சனென்னநிற்கவைத்தாய் நீதியோதற்பரமே
வஞ்சனெல்லேநீயே மதி. (௰ரு)

அப்பொருளுமான்மாவு மாரணநூல்சொன்னபடி
தப்பிலாஞ்சித்தொன்றுஞ் சாதியினு-லெப்படியுந்
தேரிற்றுவிதஞ் சிவாகமமேசொல்லுநிட்டை
யாருமிடத்தத்துவித மாம். (௰சா)

வேதமுதலாய் விளங்குஞ்சிவவடிவாம்
போதநிலையிற் பொருந்தாம-லேதமிகு
மோகாதியல்லலிலே மூழ்கினையேநெஞ்சேயித்
தேகாதிமெய்யோ தெளி. (௰எ)

நோக்கற்கரிதான நுண்ணியவான்மோனநிலை
தாக்கற்குபாயஞ் சமைத்தயிரான் காக்குமுயி
ரத்தனைக்குநானடிமை யாதனல்யானெனதென
றித்தனைக்கும்பேசவிட மில். (௰அ)

ஒன்றுமறதில்லென துணர்த்தியநம்மோனகுரு
தன்றுணைத்தாணீடூழி தாம்வாழ்க-வென்றென்றே
திக்கனைத்துங்கைகுவிக்குஞ் சின்மயராந்தன்மையர்க்
கே, கைக்குவருமின்பக் கனி. (உ௰)

மனத்தாலும்வாக்காலு மன்னவொண்ணுமோன
வினத்தார்களல்ல வினைத்தார்-கனத்தபுகழ்
கொண்டவருமன்னவரே கூறுமுத்திபெற்றி
கண்டவருமன்னவரே காண். (உ௰)

தன்னொளியேமோனக் கரும்பேகவலையறப்
பன்னொளிக்குள்ளொளியாம் பாண்மையினை-தன்னினி
சித்தமிரங்கிலெனை சித்தந்தெளியவே
வைத்தனைக்குமாதரவு மில். (உக)

றியாமைசாரி னதுவாயறிவா
நெறியானபோதறுவாய் நிற்கும்-குறியற்
சகசத்தருளுணர்த்தத் தானுணராநின்ற
விதமுற்றிடவும்போ மெய். (உஉ)

குருலிங்கசங்கமமாகக் கொண்டதிருமேனி
கருவொன்றுமேனி யப்பாற்காட்டா-தருளென்று
கண்டவர்க்கேயானந்தங் கண்டுகொளலாமனது
கொண்டவர்க்கிங்கென்ன கிடைக்கும். (உ௩)

புலியினதளுடையான் பூதம்படையான்
பலியிரந்துமெலலாம் பறிப்பான்-மலிபுனல்சேர்
பொன்முடியானமுக்கட் புனிதன்சரண்புகுந்தார்
கெனமுடியாதேது முளதே. (உ௪)

சொல்லுக்கடங்காச் சுகபொருளோதமென்னவே
யல்லும்பகலு மாற்றுவதென்-னல்லசிவ

ஞானமயம் பெற்றோர்க ளுமிலையென் பாரந்தோ
மோனமயமான முறை. (உரு)

ஐயா வருணகிரி யப்பாவுனைப்போல
மெய்யாகவோர்சொல் விளம்பினர்யார் — வையகத்தோர்
சாற்றுதென்றேசற்றார் தன்னையாய் முக்கண்ணுந்தை
நற்றமிழைச்சுருக்கங்கை காட்டினனே. (உசா)

காதற்றுப்போனமுறி கட்டிவைத்தாவலுண்டோ
நீதற்றகாமமுமச் செய்கையே-போதமாய்
நிற்பதல்லாலிச்சகத்தி னோரார்கனேரினுந்
தற்பரமாக்கண்டிருப்பார் தாம். (உஎ)

வெள்ளங்குலாவுசடை வெள்ளங்கருணையின்
கள்ளங்குலாவுவஞ்சக் கள்ளனே - னுள்ளத்தி
லிவ்வனென்றலன்னவன்று னெங்கும்வியாபகத்தா
னல்லனென்றுஞ்சொல்லவழக் காம் (உஅ)

தத்துவப்பேயோட தலையடித்துக்கொள்ளாமல்
வைத்தவருண்மௌன வள்ளலையே-நித்தமன்பு
பூரணைக்கருதுநெஞ்சு பேற்றக்கரமெழும்புங்
காணத்துடிக்குமிரு கண். (உகூ)

தொல்லைவினைக்கீடாய்ச் சுழல்கின்றகாலொருவ
னெல்லையிலாநின்கருணை யெய்துவனோ-வல்லவன்
மோனகுருவே முழுதினையுந்தானுணர்ந்த
ஞானகுருவே யனில். (௩0)

மூன்றுகண்ணு முத்தொழிலா. மும்முனைசா முலகுத்தோ
ன்றக்கருணைமொழி தோன்றிலையிறைவனே - தன்னைப்
போலவொரு தன்னைழுத்தே யொருதெய்வ
மூனைப்போ லுண்டோ வுரை. (கூக)

தேசிக்குஞ் சின்னதனை வுக்குளுஞ் சிலைவைத்துப்
பூசிக்குங் காணிரைந்து பூரணமா - யோசித்து
நின்றதல்லா னமோனு நிருவிகற்ப நிட்டையில்லை
யென்னுலவருமோ வறிவேனே. (கூஉ)

அறிவிலறியாமை யற்றறிவாய்நின்று
பிரிவரவானந்தமயம் பெற்றுக் - குறியவிழ்ந்தா
லன்றைக்குடல்வேண்டே னையாவிவ் வாக்கையையே
என்றைக்கும்வேண்டுவனே யான். (கூங)

உடலைப்பழித்திங் குணவுங்கொடாமல்
விடவிடவேண்டுவரோ மெய்மைப் - படப்படேன
வேண்டுவனித்தவுடன் மெய்யுணரா நீபொய்யலை
நாட்டநீதானே யறி. (கூச)

அறிபாயோ வென்னையு நீ யாண்ட நீசத்த
வெறியாய்மயங்கவுமேன் விட்டாய் - நெறிமயங்கிக்
குன்றுஞ்செடியுங் குறுகுமோ வையாவே
கன்றுசெட்டார்க்குயர்கே காண். (கூரு)

எதுக்குடற்சுமைகொண் டேனிருக்கிதனையவே -
யாதிக்கமோன வருட்டாயே சேதியா

மன்னநிருவிகற்ப வானந்தநிட்டையிலே
பின்னமறநில்லாத பின். (ருசா)

பின்னுமுடற்சுமையாய் பேசும்வழக்கதனு
லென்னபலனுமுற் றிருந்தோமே-யன்னதனு
லானந்தந்தானேதா னுகுமெம்மையனே
யேனிந்தத்துன்ப மினி. (ருஎ)

துன்பக்கடலிற் றுளைந்தெல்லாந்தீர்ந்தே
யின்பக்கடலி லிருமென்ன-வன்பிற்
கரைந்துகரைந்துருகிக் கண்ணருவிகாட்ட
விரைந்துவருமானந்த மே. (ருஅ)

கரைந்துகரைந்துருகிக் கண்ணீராருக
விரைந்தேநிருவிகற்ப மெய்த-நிரந்தரமு
நின்னையேசிந்திக்க நீகொடுத்தாய்மோனுநா
னென்னைமுழுதுங்கொடுத்தேனே. (ருகூ)

அல்லும்பகலும்பே ரன்புடனேதானிருந்தாற்
கல்லுமுருகாதோ கன்னெஞ்சே-பொல்லாத
தப்புவழியேயனினைந்தாய் சந்ததமுநீயிறந்த
வெப்பிலேயானந்த மே. (சாய)

கொடுத்தேனேயென்னைக் கொடுத்தவுடனின்ப
மடுத்தேனேநீடூழி வாழ்ந்தே-யடுத்தேனே
பெற்றேனேபெற்றுப் பிழைத்தேனேசன்மவல்லலிற்
றேனேயேழையடியேன். (சாக)

பெற்றோரும்பிரவாமை பேசாமையிருக்க
கற்றோரும்மௌனவுரைக் காரியமேன்-சற்றேனு
நீக்கற்றவின்பநிலை பொருந்தியேசற்று
மாக்கற்றோர்ப்பேசுமோ வாய். (௪௨)

காலன்றனையுதைத்தான் காமன்றனையெரித்தான்
பாலன்பசிக்கிரங்கிப்பாற்கடலை-ஞாலமெச்சப்
பின்னேநடக்கவிட்டான் பேரருளோநடாதார்க்
கென்னேநடக்கை யினி. (௪௩)

விண்ணாருமின்மேல் விளங்குவபோலேயிரண்டு
கண்ணாருவிவெள்ளமொடு கைகூபயித்-தண்ணமிதா
வெள்ளமேயானந்த வெற்பேயெனத்தொழுவோ
ருள்ளமேஞான வொளி. (௪௪)

பிள்ளைமகிச்செஞ்சடையோன் பேசாப்பெருமையினான்
கள்ளவிழ்ப்பூங்கொன்றைக் கண்ணியா-னுள்ளபடி
கல்லாலின்கீழிருந்து கற்பித்தானோர்வசன
மல்லாருமீட்டறவே. (௪௫)

புலனைந்துதானே பொறிமயங்கிச்சிந்தை
யலைந்துழலு மடிமை-நலமிகுந்த
சித்தனே மோனசிவனே நின்சேவடிக்கே
பித்தனானேனுண்டோ பிறப்பு. (௪௬)

நிலைகூடத்தானீர்கேளுமே நிச்சயமாமோன
முறையுணர்ந்தயாதை முயல்வார்-பிறையறிக்க

பித்தனைகலாயபவி வித்தகனே வேதியனே
செக்கரனிமேனியனே செப்பு. (௪௭)

குங்குழமா னுடையாய் சூலப்படையுடையாய் [கூ
திங்களணிசெஞ்சடையாய் சேவுடையாய்-பங்கையொ
பாகனுடையாய பசங்கட் பணியாரென் சென்னியின்மேற்
காலுடையாய் நீயே கதி. (௪௮)

இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்தசாரி யின்பக்கட்டி - தனிமுதல்வ
னித்தன் பராபரனிமல நிறைவாய்நிறைந்த
சுத்தனெமக் கென்றுந் துணை. (௪௯)

நீதியாய்க்கல்லா லினிழலின் கீழிருந்து
போதியாவுண்மையெல்லாம் போதித்தா-னேதில்
சனகாதியர்த்தவத் தோர்க்குஞான
தினகரனெம்பெருமான் சிவன். (௫௰)

தேகச்செயலுனுஞ் சிந்தையுடனே குழையில்
யோகநிலைஞானிகளுக் கொப்புவதோ-மோகநிலை
யல்லலிலே வாழ்வாரோ வப்பனேயற்ற
வெல்லையிலே சும்மா யிரு. (௫௧)

சும்மாவிருக்கச் சுகமுதயமாகுமே
யிம்மாயா யோகமினி யேனடா-தம்மறிவின்
சுட்டாலேயெ குவே சொல்லவேண்டாங்கன்ம
விட்டாகிறபிள்ளாய் நீ. (௫௨)

பத்துத்திசையும் பரந்தொழுந்தானந்தவெள்ளந்
தத்திக்கரைபுரண்டு தான். (௫௮)

தானான தன்மைவந்து தாக்கினாலவ்விடத்தே
வானாதிமாயை வழங்காதே-ஞானாகே
னுன்னுள்ளேதோன்று வறவாகிநின்றதென
வென்னுள்ளேயென்று மிரு. (௫௯)

என்னையுன்னையின்னதிது வென்னாமனிற்குநிலை
தன்னையருளென்ற தருணத்தி-லன்னைபெற்ற
பிள்ளைக்குஞ்சொல்லாத பெற்றிகண்டா
யையமனேயுள்ளத்தினுள்ளே யுணர். (௬௰)

சொன்னவர்தாநிட்டை தொகுத்தாநிட்டையிலே
மன்னினவர்போதியார் மாமௌனன்-றன்னுள்
விருப்பாகக்கைகாட்டி நிக்கவடநீழ
லிருப்பானிருவிகற்பத்தே (௬௧)

இந்தநிருவிகற்பத் தெந்தையிருக்குநிட்டை
சிந்தைநீதேறாய் செகமனைத்தும்-வந்ததொடர்ப்
பாடுகெடவணைநீறுமேவார் பாத்திரத்துக்காடலல்லா
லாடுவதேனாட்டு மவன். (௬௨)

அவனேபரமு மவனேகுருவு
மவனேயகில மனைத்து-மவனே தா
மானவரேசொன்னாலவரேகுருவெனக்கு
நானவனாய்நிற்பதெந்த நாள். (௬௩)

மந்தாரதாருவென வந்துமவுனகுரு
தந்தானோர் சொற்கொண்டு தான். (௬௯)

தானந்தவஞானஞ் சாற்றறியசித்திமுத்தி
யானவையெல்லாந்தாமே யாகுமேமேனைகுரு
சொன்னவொருசொல்வழிச் சுகமாயிருமனமே
இன்ன மயக்கமுனக்கேன். (௭௰)

உன்னையுடலையுறுபொருளைத் தாவெனவே
யென்னையடிமைக் கிருத்தினான் - சொன்னவொரு
சொல்லைமறவாமற் றோய்ந்தானெஞ்சேயுன்றோ
வில்லை பிறப்பதெனக்கே. (௭௧)

எனக்குமுனக்கு முறவில்லையெனத்தேர்ந்து
நினைக்கவரிதானவின்ப நிட்டைதனைக்கொடுத்தே
யாசான்மவுனியளித்தானென் சேயுனையேர்
காசா மதிப்பேனோ காண். (௭௨)

ஆனந்தமானகுரு வாமௌனமேயென்றறிவின்
மோனந்தனக்கிசைய முற்றியகாற் - றேனுந்து
சொல்லெல்லாமோனந் தொழிலாதியுமோன
மெல்லாநன் மோனவடிவே. (௭௩)

எல்லாமேமோனநிறை வெய்துதலாலெவ்விடத்து
நல்லாமேமோனநிறை வெய்துதலாலெவ்விடத்து
நானென்னவிதங்கொண்டுறை நடுவேமுளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோனகுருவே. (௭௪)

சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோனநிற்பாற்
கைம்மா றுநஃகொழிதல்காண். (அ0)

நன்றாகினுமயக்க நண்ணுங்கா லென்றுணை
வானன்றெனநிறைய மாட்டாய்நீ யூன்றாமல்
வைத்தமவுனத்தாலே மாயைமனமிறந்து
துய்ந்துவிடு ஞானசுகம் (அக)

ஞானநெறிக்கேற்றகுரு நண்ணரியசித்திமுத்தி
தானந்தருமந்தமைந்த குரு-மானமெடு
தாயெனவும்வந்தென்னைத் தந்தகுருவெண்சிந்தை
கோயிலெனவாழுங் குரு. (அஉ)

சித்துஞ்சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தனைபரங்குரு நேசத்தாற்சுத்தநிலை
பெற்றோமேநெஞ்சே பெரும்பிறவிசாராமற்
கற்றோமேமோனந்தகுரு (அங)

---

# ஏ சற் ற வ ந் நி லை.

## கொச்சகக்கலிப்பா.

ஏகற்றவந்நிலையே யெந்தைபரிபூரணமாய்
மாசற்றவானந்தவாரி வழங்கிடுமே
நீசற்கழல்போ லுலகநெறிவாதனையாற்
பாசத்துட்செல்லாதே பல்காலும்பாழ்நெஞ்சே. (க)

